**இலவசம்**

**பளபளக்கும் ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் கிண்ணம்**

**புதிய**

# பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

இரண்டு டின்கள் வாங்கும்போது




புதிய ஃபாரெக்ஸ் அதிக சுவையானது
புதிய ஃபாரெக்ஸ் அதிக முழுமையானது

நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும் உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.

இவ்வாய்ப்பு தேர்ந்தெடுத்த சில ஊர்களில் மட்டும் விசேஷ டின்களின்மீது ஸ்டாக் உள்ளவரை வழங்கப்படும்.

உடல் நலத்தின் உறைவிடம் – *கிளாக்ஸோ*

CLARION/B/GX/5/203 TML

# சொன்னது யார் கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்

1984 கல்கி இதழ்களில் வெளியான பல்வேறு பிரமுகர்களின் பேட்டிகளில் அவர்கள் சொன்ன கருத்துக்களில் சில கீழே தரப்பட்டுள்ளன. யார், யார் இவற்றைச் சொன்னார்கள் என்று கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்.

1. ''சினிமாக்காரர்களைப் பற்றி அதிக கிசுகிசுக்களை ரசிகர்கள் எதிர்பார்ப்பதால் தான், பத்திரிகைகள் தருகின்றன. எல்லா இடங்களையும் போலவே சினிமா உலகிலும் சில குறைபாடுகள் உண்டு. ஆனால் இவை பூதக்கண்ணாடி கொண்டு பெரிது படுத்தப்படுகின்றன.''

2. ''சிங்கள எண்களை கார் நெம்பர் பிளேட்களில் பொறித்த போது, அதை எதிர்த்து, அவற்றை அழித்து, தமிழ் எழுத்துக்களை எழுதுகிற போராட்டத்தின்போது, மூத்தவன் காண்டீபன், ஒரு வயது குழந்தை. அவ்வப்போது, குழந்தைக்குப் பாலூட்டிவிட்டு, வரும் கார்களை மறித்து, நம்பர்களை அழித்து, எழுதினேன். கைது செய்தார்கள். ஒருநாள் சிறைத் தண்டனை.''

3. ''எப்போதும் போராட்டம், மறியல் என்று போராட்டத்தை நாங்கள் தேடி அலையவில்லை. அதே நேரத்தில் மக்களின் பிரச்சினைகள் எழும்போது, ஆளுங்கட்சியின் பார்வையைத் திருப்ப, ஜனநாயகத்தில் மறியல்கள், போராட்டங்கள் இவையெல்லாம் அவசியமானவைகளாகவே கருதுகிறேன்.''

4. ''உங்களுக்குக் குழந்தைகள் பிடிக்கவில்லையா? வேண்டாமா? தயவு செய்து கருவை அழிக்காதீர்கள்; அனாதையாக்காதீர்கள்; என்னிடம் கொடுத்து விடுங்கள்.''

5. ''ரொம்ப சீரியஸான நாடகத்துல கூட காமிக் ரிலீஃப்னு கொஞ்சமாவது நகைச்சுவை இருந்தால் தான் சரிப்படும். அதுக்காக லேட்டா இருக்கற நகைச்சுவை நாடகங்களுக்கு மட்டும் தான் வரவேற்புன்னு சொல்றது தப்பு. ஆடியன்ஸ் இரண்டையும் தான் விரும்பறாங்க.''

6. ''எனக்குத் தினமும் குறைந்தது ஐந்தாறு கடிதங்களாவது தமிழ்நாட்டிலிருந்து வருகிறது. என்னை இன்னும் நினைவில் வைத்துக் கொண்டிருக்கும் தமிழர்களின் அன்பை நினைத்து நான் பூரித்துப் போகிறேன்.''

7. ''டில்லி, பம்பாய், நகரங்களுடன் ஒப்பிடும்போது, தமிழ்நாட்டில் ஆரம்பக் கல்வியின் தரம் மெச்சிக் கொள்ளும்படியாய் இல்லை. நாட்டில் ஒரு பகுதியில் தரம் உயர்ந்தும், மற்றொரு பகுதியில் தாழ்ந்தும் இருக்கும் இந்த வேறுபாடு, ஜாதிப்பாகுபாட்டை விட மோசமானது.''

8. ''இலக்கணம் தெரியாதவர்கள்தான், புதுக்கவிதை எழுத வருகிறார்கள் என்பது மிகத் தவறானது. மரபுக் கவிதைகளின் இலக்கணத்தில் மிகவும் ஆழ்ந்து தேறியவர்கள்தான் புதுக் கவிதைத் துறையில் வெற்றி பெற்றிருக்கிறார்கள் என்பது மிகப் பெரிய உண்மை.''

9. ''எந்தெந்தத் துறைகளில் என்னென்ன செய்ய வேண்டுமென அண்ணா வகுத்துக் கொடுத்த பாதைகளின் அடிப்படையில் உருவானதுதான் அண்ணாயிஸம். இதைக் கிண்டல் செய்பவர்கள் அண்ணாவையே இழிவுபடுத்துகிறவர்கள்; அவர்களுக்காக நான் வருந்துகிறேன்.''

10. ''பணப்புழக்கத்தைக் குறைத்தால் தான் பணவீக்கம் குறையும். வாழ்க்கையில் கஷ்டப்படும் தனி மனிதர்கள் முன்னேற கடன் (மேளா) விழாக்கள் உதவலாம். ஆனால் இதனால் பணப்புழக்கம் அதிகமாகி, பண வீக்கம் அதிகரித்து, விலைவாசி உயர்ந்து, இதே மக்களை அது பாதிக்கும். எனவே இத்தகைய கடன்கள் ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் அதிகரிக்கக் கூடாது.''

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி

(விடைகள் — 2ம் பக்கம்.)



















விடைகள்:

1. எஸ்.பி. முத்துராமன் (2.9.84).
2. திருமதி. மங்கையர்கரசி அமிர்தலிங்கம் (22.1.84)
3. கலைஞர் கருணாநிதி.
4. அன்னை. தெரசா (18.3.84).
5. பூர்ணம் விசுவநாதன் (18.11.84')
6. பிரபுதாஸ் பட்வாரி (13.5.84).
7. டாக்டர் இந்திரேசன் (15.7.84).
8. கவிஞர் வைரமுத்து (29.7.84).
9. ஜெயலலிதா (16.9.84).
10. முந்நாள் ரிசர்வ் பாங்க் கவர்னர், ஜகன்னாதன் (21.10.84).

# கவாஸ்கர் Vs கபில்தேவ்






## என்ன தகராறு?

''கபில் தேவின் தலைமையில் தோற்றுப் போனால் என்ன? அவருடைய காப்டன்ஷியில் நான் ஒரு குறையும் காணவில்லை. மைக் பிரியர்லி அல்லது இயான் சேப்பல் போன்ற மிகப் பெரிய காப்டன்கள் கூட இப்போ இருக்கிற இந்தியப்பந்து வீச்சாளர்களை வைத்துக் கொண்டு டெஸ்ட்டு மாட்சுகளில் ஜெயித்து விட முடியாது!'' — இப்படி ஒரு முறை சொன்ன காவஸ்கரா கபிலிடம் மோதுகிறார்?

டில்லி டெஸ்ட்டில், மைதானத்துக்குள் நுழையும் முன்னால், ''நான் விளாசப் போகிறேன்.!'' என்றார் கபில், காவஸ்கரிடம். ''நீ எப்போதும் விளையாடுகிற மாதிரி ஆடு. விஷி (விசுவநாத்) மாதிரி ஆடாதே!'' என்றாராம் காவஸ்கர். இரண்டாவது பந்தில் ஒரு சிக்ஸர். அடுத்ததும் அதே மாதிரி அடிக்கப்போக, 'காட்ச்' கொடுத்து விட்டுப் பெவிலியனுக்குத் திரும்பினார் கபில். (திரும்பும் பொழுது சிரித்துக் கொண்டே வந்தார் என்று கிரிக்கெட் போர்டு புள்ளி தெரிவித்தார்!)

''அதே மாதிரி சிக்ஸர் போகும் என்று தான் அடித்தேன். நான் என்ன செய்ய முடியும்? அதுவே சிக்ஸருக்குப் போயிருந்தால் தலை மேல் வைத்துக் கொண்டிருப்பீர்கள் என்னை!'' என்றாராம் கபில் காட்டமாக. (மோஸ்ட் இர்ரெஸ்பான்ஸிபில் ஸ்ட்ரோக் என்று டிவியில் வர்ணித்தார் பட்டோடி.)

வாரணசியில் நடந்த ஃபெஸ்டிவல் மாட்சிலேயே ஏதோ கசமுசா ஆகியிருந்திருக்கிறது. அது பத்திரிகையிலும் வெளியாகிவிட, பம்பாய் டெஸ்ட்டின் போது, யார் இந்தப்பண விவகாரத்தை எல்லாம் பத்திரிகைக்குச் சொன்னது?' என்று நிருபர்களிடம் கோபமாக விசாரித்திருக்கிறார் காவஸ்கர். (கபில்தான் என்று அவருக்குத் தெரியும்.)

ஆக — ''டீம் ஸ்பிரிட்தான் வெற்றிக்குக் காரணம்'' என்று வெற்றி பெற்ற இங்கிலாந்து அணி காப்டன் டேவிட் கோவர் சொன்னாரே, அது முழுக்க முழுக்க இந்தியர் தரப்பில் இல்லை என்று தெரிகிறது. 'காப்டனிடம் தகராறுகள் செய்வது கபிலுக்கு வாடிக்கை. ஒரு முறை மைதான விளிம்பில் டீப் மிட் விக்கெட் இடத்தில் ஃபீல்டிங் செய்யத்தகராறு செய்தார்' என்கிறார் ஒரு நிருபர்.

டில்லி மைதானத்தில் கபில் அலட்சியமாய் விக்கெட்டை வீசியெறிந்தது மட்டுமே அவரை கல்கத்தா டெஸ்ட்டிலிருந்து நீக்க ஒரு காரணமாய் இருக்க முடியாது. கபில், சந்தீப் பட்டீலின் மராத்திய கிரிக்கெட் பத்திரிகைக்குக் கொடுத்த பேட்டிகளும் ஒரு விதத்தில் காவஸ்கரின் ஆத்திரத்தைத் தூண்டியிருக்கின்றன. அதற்கு அடுத்தபடி பண விவகாரம். ஆனால் அதுதான் பெரிதுபடுத்தப்பட்டிருக்கிறது. ('பரிசுப் பணத்தில் காவஸ்கர் அதிகம் எடுத்துக் கொண்டு, மற்றவர்களுக்குக் குறைச்சலாய்க் கொடுக்கிறார்.)

○ ராஜன் பாலா



''டிஸிப்ளின் முக்கியம். அதே போல் குழுவின் நிலைமை உணர்ந்து ஆடக் கூடிய பொறுமையும் அவசியம். கபிலிடம் இவை இரண்டுமே இல்லை. நடவடிக்கை எடுத்தது நியாயம் இல்லைதான்!'' என்பது பெயர் சொல்ல விரும்பாத ஒரு முக்கியப்புள்ளியின் கருத்து. இதற்குப் பின்னணி என்னவாக இருக்கும் என்று அறிய, கிரிக்கெட் நிருபர் ராஜனபாலாவை அணுகினோம். (திரு. ராஜன் பாலா 117 டெஸ்ட்டுகளை நேரில்பார்த்து எழுதியவர். 23 வயதிலேயே கிரிக்கெட் பற்றிப் புத்தகம் எழுதியவர். 'டெய்லி டெலிகிராஃப்' நாளிதழ் தேர்ந்தெடுத்த ,உலகின் மிகச்சிறந்த ஐந்து கிரிக்கெட் எழுத்தாளர்களில் ஒருவர். சிறந்த பாட்ஸ்மேன், சிறந்த பௌளர், சிறந்த விக்கெட் கீப்பர், இவர்களைத் தேர்ந்தெடுக்கும் குழுவில் அங்கம் வகிக்கும் ஒரே ஆசிய கிரிக்கெட் நிருபர்.)

ராஜன் பாலா சொன்னதன் சுருக்கம், இதோ:.

''அந்தக் காலத்தில் எல்லாம் 75 ரூபாய் தான் ஆரம்பத்தில் ஒரு டெஸ்ட்டுக்குக் கொடுத்தார்கள் என்றால் நம்ப மாட்டீர்கள். அப்புறம் தான் 250, 750 என்று உயர்ந்து. இன்று பத்தாயிரத்து அறுநூறு ரூபாயாக ஆகியிருக்கிறது!...

கிரிக்கெட போர்டின் தலைவர் என். கே. பி. சால்வே ஒரு மத்திய அமைச்சர். அவருக்கு எங்கே நேரம்? துணைத் தலைவர் ஐ. எஸ். பிந்த்ரா. ஐ. ஏ. எஸ். கியானி ஜெயில் சிங் அவர்களின் காரியதரிசி. ஸோ, கிரிக்கெட்டில் பாலிடிக்ஸ் மெல்ல நுழைந்து கொண்டு விட்டது...

அஜித் வாடேகர் ஒருவர் தான் இந்திய காப்டன்களில் ஈகோ இல்லாதவர். கபில் வந்த பிறகு, காவஸ்கர், கபில் இருவருக்குமே இந்த ஈகோ பிரச்சினை (சுய முக்கியத்துவம்) தலைதூக்கி ஆடியது.

அன்றைக்கு பிஷன் சிங் பேடி காவஸ்கரைக் சட்டுப்படுத்த முடியாமல் திண்டாடினார். இன்று காவஸ்கர் கபில் தேவைக் கட்டுப்படுத்த முடியாமல் திணறுகிறார்! குழுவிலேயே கபில் ஒருவர் தான் காவஸ்கரை எதிர்த்துப் போராராடக் கூடியவர்.

காவஸ்சரை விடப் பணத்தாசை பிடித்த இன்னொரு கிரிக்கெட் ஆட்டக்காரரைப் பார்ப்பது அபூர்வம். தலைமைப் பொறுப்பிலும், ஆட்டத்திலும் சிறந்த காவஸ்கர், தம் திறமைக்கு முன்னால் பணத்துக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து வருகிறார் என்று சொல்லியே ஆக வேண்டும். (''எனக்கு எவ்வளவு செல்வம் இருக்கிறது என்பதே தெரியாது. என் தகப்பனாரைத்தான் கேட்க வேண்டும்!'') அவர் காண்பிக்கும் நிதானமும், வெளிப்படையாகத் தெரியும் அமைதியும் உண்மையானவை அல்ல. அவருடைய தலைமையையும், தகுதியையும் எதிர்க்கும் எவரையும் துச்சமாக மதிக்கும் குணம் உடையவர் காவஸ்கர். ஒரு கிரிக்கெட் வீரரான கபில், காவஸ்கரை டிப்ளமாடிக்காக எதிர்க்க இயலவில்லை. போராடும் குணம் படைத்த 'ஜாட்'வம்ச கபிலுக்கும், அதிசாமர்த்திய சாலியான மராட்டிய காவஸ்கருக்கும் இடையே நடக்கும் போர் என்று தான் இதைச் சொல்ல வேண்டும். ('காவஸ்கரிடம் மாட்டிக் கொண்டு விழிக்காத ஆட்டக்காரர்களா! பேடி, வெங்கட்,தோஷி மொஹிந்தர். இப்போது கபில்...' என்கிறார் அன்றைநகர் எம். சத்யஜித்.)

முப்பத்தொரு தோல்வியடைந்த மாட்சுகளுக்குக் காரணமான இருவருமே ஒருவரை ஒருவர் தாக்கிக் கொள்வதை விட்டுவிட்டு, நண்பர்களாயிருந்து ஒத்துழைத்தால் பரிசுப் பணம், புகழ், வெற்றி எல்லாவற்றையும் சிராகப் பகிர்ந்துகொள்ள முடியும். அதை விட்டுவிட்டு, இப்போது கபில் டில்லிடெஸ்ட்டில்அசட்டையாயிருந்தார்என்று இவர்என்று சொல்லி ஒழுங்கு நடவடிக்கை என்ற பெயரில் அவரைத் துரத்தியடிப்பது, பையன் டாய்லெட்டில் சிகரெட் பிடித்ததைத் திடீரென்று கண்டு பிடித்துவிட்ட தகப்பனாரின் நடவடிக்கை போல் முட்டாள் தனமாயிருக்கிறது.

பணத்தைப் பங்கு போட்டுக் கொள்வதில் தான் தகராறு என்றும், கபிலை நீக்கினாலும் தன்னால் வெற்றி பெற முடியும் என்று காவஸ்கர் நினைப்பதும் பொதுமக்களை முட்டாளாக்கும் வேலை. தன்னை ஓர் ஒழுங்கு முறையாளன் என்று மக்களிடம் காண்பித்துக்கொள்ள காவஸ்கர் செய்யும் சூழ்ச்சி. கபில் இல்லாமல்ல காவஸ்கர் இந்த சீரிஸில் வென்று விடுகிற பட்சத்தில், கபில் ஒன்றும் அவ்வளவு முக்கியமில்லை டெஸ்ட் வெற்றிக்கு என்று நிரூபித்து விட்ட மாதிரி காட்டி விட்டு, டெஸ்ட் கிரிக்கெட்டிலிருந்தே ரிடையர் ஆகி விடவும் செய்வார் காவஸ்கர்! கடைசியில் நஷ்டம் இந்திய கிரிக்கெட்டுக்குத் தான்.

இருவருக்கும் சுய முக்கியத்துவம் (ஈகோ) தான் பிரச்னை. பணத்தகராறு கூடச் சிறிய விஷயம் தான். கபில் உலகக் கோப்பைப் புகழ் பெற்றதிலிருந்தே இந்தப் புகைச்சல் அதிகமாகிவிட்டது.''

கிரிக்கெட் போர்டு தலைவர் சால்வே இருவரையும் சமரசப் பேச்சு வார்த்தைகளுக்கு அழைத்து அவர்களிடையே விரோத பாவம் ஏதுமில்லை என்பது போல் பூசி மெழுகி, கபிலைப் பதினைந்தாவது ஆட்டக்காரராகச் சேர்த்துக் கொள்ளச் சொல்லியிருக்கிறார். இதற்கே தேர்வாளர் உரிமையில் தலையிடுவதாக எதிர்ப்புக் கிளம்பியுள்ளது!

கபில் கல்கத்தா டெஸ்ட்டில் ஆடினாலும், ஆடாவிட்டாலும் கபில் — கவாஸ்கர் மனப் புகைச்சல் அடங்காது. அது அடங்காத வரை இந்திய கிரிக்கெட் அவ்வப்போது மூச்சுமுட்டி திணறிக் கொண்டுதான் இருக்கும்.

—சாருகேசி

---

மேலட்டை: பி. வி. ஆர்.

வண்ணப்படம்: உத்ரா

ஆகாச கங்கை—

வண்ணச்சித்திரம்: ஜெயராஜ்

# ஹிந்தி பேசிப் பழகுங்கள்




Big Size

Pages : 266

Price : Rs. 20/-

**Postage Free**

## தமிழ்-ஹிந்தி லர்னிங் கோர்ஸ்

இதோ, அதற்கான வழி—

- தமிழ் வழி நொடிப்பொழுதில் ஹிந்தி கற்க அற்புதமான உத்திகள்.
- அன்றாடத் தேவைகளை ஹிந்தியிலேயே பேசி நிறைவேற்ற அவசியமான ஹிந்தி மொழியறிவு தரும் 2,500 'தமிழ்-ஹிந்தி' வாக்கியங்கள்.
- ஹிந்தி வாக்கியங்கள்/சொற்றொடர்களின் உச்சரிப்பைத் 'தமிழி'ல் கொடுத்துள்ளது.
- ஹிந்தி மொழி வழங்கும் மாநிலத்துக்கு இட மாற்றம் பெறும் நிலையிலுள்ள அலுவலர்க்கும், ஹிந்தி பேசும் நகரங்களில் வர்த்தக நிறுவனங் கள் நடத்துவோர்க்கும் அத்தியாவசியமானது. விற்பனையாளருக்கோ உற்றதுணையானது.

போலிப் பெயர்களைக் கண்டு ஏமாறாதீர்கள். "ரேபிடெக்ஸ் கோர்ஸ்" என்றே கேட்டு வாங்குங்கள்.

வகுப்புகளில் சேராமலேயே, ஆசிரியர் உதவியை நாடாமலேயே, ஆங்கிலத்திலும் ஹிந்தியிலும் நீங்கள் தடையின்றிப் பேசலாம், கடிதங்கள் வரையலாம்.

'ரேபிடெக்ஸ்' என்பது தில்லி புஸ்தக் மஹலால் பதிவுசெய்யப்பட்ட "டிரேட் மார்க்" ஆகும்.

**திருப்தி இல்லையேல் பணம் திருப்பித் தரப்படும்**

***AVAILABLE AT:*** Leading bookshops, Railway Book Stalls Higginbotham's or ask by V. P. P. from



**PUSTAK MAHAL**

Khari Baoli, Delhi-110006

10-B, Netaji Subhash Marg, New Delhi-110002

சென்னை அண்ணாசாலையில் உள்ள மகளிர் காயிதே மில்லத் காலேஜில் நடைபெறும் எட்டாவது சென்னை புத்தகக் கண்காட்சியில் எங்களது ஸ்டால் நெ. **65** மற்றும் **66க்கு** விஜயம் செய்து எங்களது புஸ்தகங்களை வாங்கி பத்து சதவிகிதம் தள்ளுபடி பெற்று பயன் அடையுங்கள். மற்றும் **பி.டி. பெல் & கம்பெனி** புஸ்தக ஸ்டால்களிலும் எங்களது புஸ்தகங்களுக்கு பத்து சதவிகிதம் தள்ளுபடி உண்டு.

## ஆய்வு

**பல்கலைக் கழகங்கள் அதிகமாகி வருவதற்கேற்ப, அவற்றின் தரமும் பெருகி வருகிறதா? பல்கலைக் கழகங்களுக்கு யார் ஐ.எஸ்.ஐ. முத்திரை போடுவது?**

# கல்வி நிலையங்களா?

**வே**லையில்லாப் பிரச்சினை பல்கிப்பெருகி வருவதால் யாருக்கு இலாபமோ இல்லையோ கல்வி நிலையங்கள் என்னும் பெயரால், காளான்களைப் போலக் கணக்கின்றிப்பெருகி வரும் இவைகளுக்கு நல்ல வேட்டைதான். பட்டங்களையும், டிப்ளமாக்களையும் தங்கள் மனம் போனபடி எத்தனையோ தனியார் நிறுவனங்கள் அச்சடித்து வினியோகித்து வருகின்றன. கடைத் தெருவில் காய்கறியைப் பேரம் பேசி வாங்குவது போல, பணத்துடன் முயன்றால், கணக்கற்ற பட்டங்களைப் பெற முடியும்.

லேட்டஸ்ட்டாக, எத்தனை கம்ப்யூட்டர் சென்டர்கள். அரிச்சுவடியே தெரியாதவன் அந்தாதி படைப்பது போல, கம்ப்யூட்டர் குறித்தான ஏ, பி, சி, டி தெரியாதவர்கள் கூட வியாபாரத்தில் குதித்து விட்டார்கள். இவை எல்லாம் போதாதென்று தமிழக அரசு புதிதாகச் சுய முதலீட்டு நிதிக் கல்வி நிறுவனங்களை (Self - financing Educational Institutions) பிரசவித்துள்ளது.

ஒரு சின்ன இடம், கூரை வேய்ந்த கட்டிடம், பெரிதான பெயர்ப் பலகை — இவை உங்களிடம் இருந்தால் போதும். பொறியியல் கல்லூரி ஒன்றிற்குச் சொந்தக்காரனாகி விடுவீர்கள். புதிதாகத் தமிழகத்தில் இதுபோன்று 13 பொறியியல் கல்லூரிகள் துவக்க அனுமதி வழங்கப்பட்டுள்ளன. மாணவர்களைச் சேர்ப்பதில் அவசரம் காட்டுவதைவிட, இரும்புப் பெட்டி நிறைவதில்தான் இவை அக்கறை செலுத்தி வருகின்றன.

ஆளுங்கட்சிக்கு மிக நெருக்கமான ஒருவரால் துவக்கப்பட்ட கல்லூரி ஒன்றில், ரூ.27,000 பெற்றுக்கொண்டு, ரூ. 7,000க்கு மட்டும் இரசீது கொடுத்துள்ளார்கள். 'ஆள்' பிடித்துக் கொடுத்துச் சாப்பாட்டிற்கு வழிதேடிய ஒருவர், இன்று பொறியியல் கல்லூரி ஒன்றிற்கு கரஸ்பாண்டெண்ட். பொறியியல் கல்லூரியில் என்ன பொரியல் கிடைக்கும் எனக் கேட்பவர்களின் இரகத்தைச் சார்ந்தவர் இவர்.



○ ''சுந்தர வடிவேலு: நன்கொடை என்பது இன்று வர்த்தகத்துக்கு மாறிவிட்டது''



○ துரைமுருகன்: ''கோயிற்பணிகளைவிட மேலானவை கல்லூரிகள்''

கல்லூரிகளுக்கான அடிப்படை வேலைக் கூடங்கள், அறிவியல் கூடங்கள், போதிய ஆசிரியர்கள் — நூலக வசதி இவை இல்லாமலேயே மாணவர்களைச் சேர்க்க ஆரம்பித்துள்ளனர். சாராயக் கடை ஏலம் எடுப்பதைவிட, கல்லூரி ஒன்றைத் துவக்குவதே பெருத்த இலாபத்தைத் தருமென எதிர்பார்த்துப் பண முதலைகள் காரியங்களில் இறங்குவது சாதாரணச் செயலாகிவிட்டது.

திருவல்லிக்கேணியில் எம். பி. பி. எஸ். பட்டத்தைத் தன்னிச்சையாகப் பல ஆண்டுகளாக அளித்து (விற்று) வந்த தனியார் நிறுவனம் ஒன்று போலீசின் பிடியில் இப்போது.

எம். பி. ஏ., சமூகநல நிர்வாகம், பொது மக்கள் தொடர்பு — தொழிற் சட்டங்கள் — மருத்துவமனை நிர்வாகம், உடலியற்கல்வி, நிர்வாக இயல் மற்றும் தொழிற்தொடர்பு, ஹோட்டல் நிர்வாகம், அந்நிய மொழிப் பயிற்சி ஆகியஇத்தனையையும்போதிப்பதாகச் சொல்லி வந்த விளம்பரம் கண்ணை உறுத்த சென்னையிலிருந்துநூறுமைல் பயணமானோம்.

தந்தை இயக்குநர், மகன் பதிவாளர். பேருக்கு ஒரே ஒரு பேராசிரியர் (ஓய்வு

பெற்ற யு. ஜி. சி. பேராசிரியர் இவர்.) ஆகிய இவர்கள் தான் இங்கே வாசம்.

நான்கு அடுக்குகளில் 'சில' நூறு புத்தகங்கள். அண்ணாவின் படமும் குமாரசாமியின் படமும் (சென்னைப் பல்கலைக்கழக முன்னாள்பதிவாளர்) பெரிய அளவில் சட்டத்தின் உள்ளே. 'தன்னாட்சி பெற்ற நிறுவனம்' என்று பிரபல செய்தி இதழ்களில் நாள்தோறும் விளம்பரம். எம். பி. ஏக்கு ரூ. 20,000 வரை வாங்குவதாக விசாரித்த அளவில் தெரிய வருகிறது.

பல்கலைக் கழக சிண்டிகேட் உறுப்பினரான துரைமுருகன் 'சமீபத்தில் இந்நிறுவனத்திற்கு விஜயம் செய்து இந்நிறுவனத்திற்கு அங்கீகாரம் தரலாமா வேண்டாமா என்பது குறித்துத் தமது பரிந்துரைகளை அளித்திருக்கிறார். இதுபோன்ற நிறுவனங்களுக்கு அங்கீகாரம் அளிப்பது தற்கொலைக்குச் சமம் என்றே அவர் பரிந்துரைத்திருப்பதாகப் பல்கலைக் கழக வட்டாரங்களில் பேச்சு.

இதுபோன்று தமிழகத்தில் நூற்றுக் கணக்கான நிறுவனங்கள் மக்களிடமிருந்து பணத்தைக் கொள்ளையடித்துக் கொண்டிருக்கின்றன.



○ ஏ. சுப்ரமணியம்: ''கட்சி ஆட்களைத் திருப்திப்படுத்த மூளையற்ற காரியங்கள்''



○ ஜீ. விஸ்வநாதன்: ''ஆதார மில்லாத புகார்கள்.''

# கொள்ளைக் கூடாரங்களா!

சிறந்த கல்வி நெறியாளரும், சென்னைப் பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தருமான நெ. து. சுந்தரவடிவேலு என்ன கூறுகிறார்?

''ஏற்கெனவே பல்கலைக் கழகத்தில் கல்லூரிகளையோ அல்லது நிறுவனங்களையோ அங்கீகரிப்பதற்கு வழிமுறைகள்— விதிமுறைகள் திட்டவட்டமாகக் கூறப்பட்டுள்ளன. அவைகள் கண்டிப்பாகவும் அமுல்படுத்தப்பட்டன. எடுத்துக் காட்டாக ஒரு கலைக்கல்லூரி தொடங்க வேண்டுமானால் ரூ. 5 லட்சத்தைப் பதிவாளர் மற்றும் கல்லூரி நிர்வாகம் பெயரில் கூட்டாக வங்கியில் போட வேண்டும். வட்டியைத்தான் செலவு செய்ய வேண்டும். கூடுதலாகப் பாடப் பிரிவு தேவைப்பட்டால் தனித்தனியாக 'எண்டோமெண்ட்' கேட்டு வற்புறுத்தப்பட்டது. மொத்தமாகக் கட்ட முடியாதவர்கள் தவணைமுறையிலும் செலுத்த அனுமதிக்கப்பட்டார்கள். தவறியவர்களுக்கு அங்கீகாரம் திரும்பப் பெறப்பட்டது.

''சுய முதலீடு கல்வி நிறுவனம் என்பதே தவறான அணுகுமுறை. பல்லாண்டுகளுக்கு முன்னரே வட இந்தியாவில் இருந்த இந்தப்புற்றுநோய் இன்று தமிழகத்திலும் வேகமாகப் பரவியுள்ளது கண்டிக்கத்தக்கது.

''உயர் கல்வியை நெறிப்படுத்த வேண்டிய பல்கலைக் கழகங்கள் அரசியல் ஆதிக்க ஆட்டங்களுக்கு ஏற்பத் தங்களை மாற்றிக் கொள்வது கல்வியை — அதன் தரத்தைக் குறைக்கத்தான் செய்யும். ஒரே மாநிலத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பல்கலைக் கழகங்கள் அஞ்சல் வழித்துறை நடத்துவது கூட வியாபாரம் தான். நன்கொடை கொடுத்தால் தான் அனுமதி என்பது அரசின் செலவிலேயே நடத்தப்படும் பள்ளிகளிலும் புகுந்து விட்ட பிறகு, தனியாரைக் குறை சொல்லிப் பயனில்லை. இதுகுறித்து நாட்டு மக்கள் வெட்கமும், வேதனையும் படவேண்டும்.

''இந்த நன்கொடை என்பது லஞ்சத்திற்கு மாற்றுப் பெயர். நன்கொடை என்ற சொல்லையே இழிவுபடுத்தி விட்டார்கள். இந்த நச்சு அரவம் தமிழகக் கல்வித் துறையில் அரசின் அங்கீகாரிப்போடு நுழைந்திருப்பது வெட்கக் கேடானதாகும்.

''மாநில — மத்திய அரசுகளின் தலையாய கடமை என்ன? கல்வி தேவையென்றால் அதற்கான செலவை ஏற்றுக் கொண்டு, தகுதியுடைய அனைவரும் கல்வி பெறும் வாய்ப்பை விரிவுபடுத்துவதுதான். மாறாக, வியாபார நோக்கோடு, தனியார்களை ஊக்குவிப்பது மரக்கிளையில் அமர்ந்துகொண்டே கிளையை வெட்டுவதற்குச் சமமாகும்.

''இதுபோன்ற . செயல்களால் பயம் தணிந்து போன தனியார்கள் தங்கள் விருப்பத்திற்கு ஏற்பப் பட்டங்களையும் — பட்டயங்களையும் பணத்திற்காக விற்று விடுகிறார்கள். முதலில் அரசு நிறுவனங்கள் இருந்தட்டும். பின்னர் தன்னாலேயே இவர்கள் பயத்தில் இருந்து விடுவார்கள்.''

**செ**ன்னைப் பல்கலைக் கழக சிண்டிகேட் உறுப்பினரான **துரைமுருகன்** பொரிந்து தள்ளினார்:

"கோழிப் பண்ணையை விடக் கேவலமாக உள்ளன தற்போதுள்ள கல்லூரிகள். பாழடைந்த பங்களாக்களையும், கூரைக் கொட்டகைகளையும் காட்டிக் கல்லூரி நடத்துகிறேன் என்று கூறுவது மக்கள் பணத்தைக் கொள்ளையடிப்பதே. முகமூடிக் கொள்ளைக்காரன் இரவிலே கொள்ளையடிக்கிறான். இவர்களோ முழுவிலாசம் கொடுத்துப் பகலிலேயே கொள்ளை அடிக்கிறார்கள்.

"இதுபோன்ற வழிப்பறிக் கொள்ளைக்குத் துணை போகக் கூடாது பல்கலைக் கழகங்கள். அவை கல்வியின் தரத்தைக் கட்டிக்காப்பதில் உறுதியாக இருக்க வேண்டும் என்பதே நான் விரும்புவது.

"ஆனால் அரசாங்கமோ, இந்தக் கல்விக் கொள்ளையர்களுக்குத் துணை போகிற வழியில் பல்கலைக் கழகத்தினுடைய சட்டதிட்டங்களைப் புறக்கணித்து விடுகிறது. அரசின் 'ஆமாம் சாமிகள்', சிண்டிகேட்டில் அதிகரித்து விட்டதே இதற்குக் காரணம். அரசு சொன்னபடி, சிண்டிகேட்டில் ஆடுகிறார்களே தவிர, சட்டத்தை மறந்து விட்டார்கள்.

### இவர் மகளுக்கு நேர்ந்த கதி!

பாகிஸ்தானைச் சேர்ந்த விஞ்ஞானி புரொபசர் அப்டஸ் சலாம் பௌதிகத்திற்காக நோபல் பரிசு பெற்றவர். அவருடைய மகள் பௌதிகத்தை முக்கிய பாடமாக எடுத்திருந்ததால் அப்டஸ் சலாம் அவளுக்குச் சிரத்தையுடன் பாடங்களைச் சொல்லிக் கொடுத்தார். ஆனாலும் அவள் தேர்வில் வெற்றி பெறவில்லை.

"வீட்டில் உன்னுடைய தந்தை பௌதிகம் பற்றிச் சொல்லிக் கொடுக்கும் அபத்தங்களையெல்லாம் தேர்வில் எழுதாதே. எழுதினால் நீ தேர்வு பெறுவது நிச்சயமில்லை" என்று எச்சரித்தார்களாம் பள்ளி ஆசிரியர்கள்.

கடைசியில் தமது மகள் பௌதிக பாடத்திற்கே முழுக்குப் போட்டு விட்டு மொழி இயலை முக்கிய பாடமாக எடுத்துப் படிக்கத்தொடங்கி விட்டதாகக் கூறினார் அப்டஸ் சலாம்!

—காயத்ரி.



பல்கலைக் கழகம் தன்னாட்சி பெற்ற தனி நிறுவனம் என்பது பெயரளவில் இருக்கிறதே தவிர அரசு அதைத் தன் ஆளுகைக்குட்பட்ட ஒரு பிரதேசமாக மாற்றி இருக்கிறது.

"அரசியலுக்கு அப்பாற்பட்டு, படித்த வர்க்கமும், கல்வி நெறியாளர்களும் பல்கலைக் கழகப் பாரம்பரியம் கெட்டுப் போகக்கூடாது என்று கருதுகிற சிந்தனையாளர்களும் அரசின் இந்தத் தரங்கெட்ட போக்கைத் துணிந்து கண்டிக்க முன்வர வேண்டும்.

"பல்கலைக் கழகச் சட்டதிட்டத்தில் திட்டவட்டமாகவே குறிப்பிடப்பட்டுள்ளது: "கல்லூரி அங்கீகரிப்பதற்கான மனுக்களை ஜூலை 1 முதல் அக்டோபர் 31–க்குள் அளிக்க வேண்டும். அவை நவம்பருக்குள் பரிசீலிக்கப்பட வேண்டும். அங்கீகரிப்பு அடுத்த கல்வியாண்டிற்குத்தான் பொருந்தும்" என்கிறது. ஆனால் இந்த வரையறையை மீறி, இந்த ஆண்டில் மனுச் செய்தவர்களுக்கு இந்த ஆண்டிலிருந்தே அங்கீகாரம் தர வேண்டும் என்றால் என்ன அர்த்தம்? பல்கலைக் கழகத்தின் 'தரம்' இந்த அளவில் தாழ்ந்ததற்கு யார் பொறுப்பு?

"அரசே, இந்த அளவிற்குத் தாழ்ந்து சட்டத்திற்குப் புறம்பான வகையில் அனுமதேயக் கல்லூரிகளுக்கு அங்கீகாரம் அளிக்கப் பகிரதப் பிரயத்தனம் செய்கையில், தனியாரின் கை ஓங்கித்தான் நிற்கும். இதற்குத் தமிழக அரசும் கல்வி அமைச்சரும்தான் முழுப் பொறுப்பு என்று குற்றம் சாட்டுகிறேன்."

**வே**லூரில் புதியதாக சுய முதலீட்டு திட்டத்தின் கீழ் பொறியியல் கல்லூரியைத் திறந்தவரான ஜி. விஸ்வநாதனின் கருத்தென்ன என்பதை அறிய அவரையும் சந்தித்தோம்.

"வடார்க்காடு மாவட்டம் துவங்கப்பட்டு 200 ஆண்டுகளுக்கு மேலாகின்றன. தொழிற் கல்விக்கான கல்வி நிலையங்களின் காற்றுகூட இம்மாவட்டத்தில் படவில்லை. சென்னையை அடுத்துச் சேலத்தில் தான் பொறியியல் கல்லூரியே உள்ளது. அரசுத் தரப்பில் ஏழு கல்லூரிகளும், தனியார் வசம் 5 கல்லூரிகளும் தற்போது உள்ளன. தமிழகத்தில் சுயமுதலீட்டுத் திட்டத்தின் கீழ் புதிதாக 13 கல்லூரிகள் துவங்க அனுமதிக்கப்பட்டுள்ளது. தொழிற்கல்வியின் பயனை உணர்ந்த அரசு, ஆட்சியில் இருப்பதால், இதுபோன்ற திட்டங்கள் செயல்படுத்தப்பட்டுள்ளன."

சுயநிதி முதலீட்டு நிறுவனங்கள் எல்லாம், பணம் பறிக்கும் பெரிய முயற்சியின் கால்கோளே என்று பல தரப்பில் பேசப்படுவது குறித்தும், இவ்வருடம் மாணவர்களைத் தேர்ச்சிக்கு அனுப்ப குறைந்தபட்ச வருகை நாட்கள் (Minimum Percentage of attendance) இருக்காது என்பது குறித்தும், ரூ. 40,000 முதல் ரூ. 70,000 வரை பணம் வாங்கப்படுவதாகக் கூறப்படுவது குறித்தும் நமது சந்தேகங்களைத் தெரிவித்தோம்,

''எதிர்க்கட்சிகள்தான் இதுபோன்ற ஆதார மில்லாத புகார்களை எழுப்பி வருகின்றன. கர்நாடகாவில் தனியார் வசம் உள்ள 46 பொறியியல் கல்லூரிகளிலும், தாராளமாக கவே கேபிடேஷன் ஃபீஸ் வசூலிக்கப்படுவது குறித்து இவர்கள் வாய் திறப்பதில்லையே ஏன்?

''கல்லூரியின் வளர்ச்சி கருதி நன்கொடையினை மட்டும் பெற்று வருகிறோம். பல்கலைக் கழக இணைப்பில் தாமதம், புதிய துணைவேந்தர் பதவி ஏற்காததால் ஏற்பட்டதே. வருகை நாட்களைச் சரிக்கட்ட விடுமுறை நாட்களிலும் பணிபுரிவோம். பணம் கொடுத்துத்தான் கல்லூரி திறக்க அனுமதி வாங்கினோம் என்பதெல்லாம் பொய். என்னைப் பொறுத்து ஒரு பைசா கூட செலவழிக்க வில்லை. ரூ. 12,00,000 — ஐ பொறியியல் கல்விக்கான இயக்குனர் பெயரில் டெபாசிட் செய்தது தான் செலவு. இதைத் தவிர வேறு விதத்தில் செலவழித்தோம் என்பதெல்லாம் ஏதோ பேச வேண்டும் என்பதற்காகப் புனைந்துரைக்கப்பட்ட கற்பனையே'' என்று சொல்லி முடித்தார், ஜி. விஸ்வநாதன்.

பொருளாதார வல்லுநரும், மத்திய மாநில அமைச்சரவைகளில் முக்கிய பொறுப்பு வகித்தவருமான சி. சுப்பிரமணியம், மனம் வெதும்பி நிதானமாக, ஆனால் அழுத்தமாகக் கூறுகிறார்:

''எதிர்காலச் சந்ததியினர் வளம்பெற்று வாழ, வழிவகுத்திடும், இன்றைய கல்வி முறை 'எடுப்பார் கை பிள்ளை போல', அரசியல்வாதிகளின் கையில் சிக்கிச் சீரழிந்து கொண்டிருப்பது மனத்திற்கு வருத்தத்தை அளிக்கிறது. எத்தனையோ வெளிநாட்டுக் கல்வி நிபுணர்கள், பல்கலைக் கழக வல்லுனர்கள் பாராட்டிச் சென்ற தமிழகத்தின் கல்வித்துறை, இன்று சீரழிவுப் பாதையில் சென்று கொண்டிருப்பதாகத் தான் நினைக்கிறேன்.

''பணம் — இதுதான் இன்றைய ஒரே தேவை. அது சாராயக்கடையில் வந்தால் என்ன? கல்லூரிகள் மூலம் கொள்ளையடித்தால் என்ன?

''என்னைப் பொறுத்த வரைக்கும் கல்விக் கூடங்கள் — கல்லூரிகள் பெருகுவதைக் கூட ஒரு ஆரோக்கியமான செயலாகக் கருத முடியவில்லை. காரணம், தரமின்றி நடத்தி என்ன சாதிக்க முடியும்? ஆட்சியில் நீடிக்க வேண்டும் என்பதற்காகத் தனது கட்சி ஆட்களைத் திருப்திப்படுத்த வேண்டி முறையற்ற காரியங்களில் அரசு ஈடுபடுகிறது.

''தனியார் கல்லூரிகளும் — நிலையங்களும் இன்று அவரவர்களாகவே டிகிரிகளையும், டிப்ளமோக்களையும் அச்சடித்து வழங்கி வருகிறார்கள், பல்லாயிரக் கணக்கில் பணத்தைப் பிடுங்கிக் கொண்டு இது எங்கே போய் முடியுமோ என்று நினைக்கும் போது எதிர்காலமே சூன்யமாகத் தென்படுகிறது எனக்கு.''

'கல்லூரி தொடங்க அனுமதி மறுக்கப்பட்டால் எஸ். டி. எஸ். கட்சிக்குச் சென்று விடுவோம்' என்று பூச்சாண்டி காட்டியே, ஆளுங்கட்சிப் பிரமுகர்கள், பொறியியல் கல்லூரிகளுக்கும், பாலிடெக்னிக்குகளுக்கும், அனுமதி பெற்றதாக, அ. தி. மு. க. மூத்த எம். எல். ஏ. ஒருவர் நம்மிடம் கூறிய போது வெட்கப்படத்தான் வேண்டியிருந்தது. ஆட்சித் தேரினைச் செலுத்த அதிகார வர்க்கத்தில் உள்ள சாரதிகள் என்னென்ன செய்ய வேண்டி உள்ளது என்பதை எண்ணிப் பார்க்கும்போது, நமது அரசியல் அமைப்பைக் கண்டு அழுவதா சிரிப்பதா என்றே புரியவில்லை.

கல்விச் சாலைகள் பெருக வேண்டும் என்பது குறித்து அரசுக்கு இருக்கும் ஆதங்கத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் அவை அரசியல்வாதிகளின் செல்லப் பிள்ளைகளாக மாற்றப்படுகையில்... ஏற்படும் விளைவுகள் எதிர்கால சமுதாயத்தை அல்லவா நச்சுக்குழியில் தள்ளுகிறது.

—ராஜேன்

படங்கள்: சித்ரா மணி

---

''இறைவனே, நான் மிகவும் துன்பப் படுகிறேன். உடனடியாக ரூ. 250 அனுப்பி வைத்தால் தான் பிழைக்கலாம்'' என போலந்தில் ஒரு ஏழைத் தையற்காரர் கடிதம் எழுதியிருந்தார்.

அஞ்சல் துறை அதிகாரி அதை போலந்தை ஆளும் மார்ஷலின் பார்வைக்கு அனுப்பினார் இரக்கப்பட்டு. கடிதத்தைப் படித்த மார்ஷல், ''உன் வேண்டுகோள் ஏற்கப்பட்டது. இறைவனின் சார்பாக ரூ. 250 அனுப்பப் பட்டுள்ளது'' என்று பெருமையுடன் எழுதி, பணத்துக்கு உத்தரவும் பிறப்பித்தார்.

சில நாட்கள் கழித்து மீண்டும் ஒரு கடிதம் அதே தையற்காரரிடமிருந்து இறைவனுக்கு அனுப்பப்பட்டு மார்ஷலிடம் வந்து சேர்ந்தது. ''அன்புள்ள ஆண்டவனே, பணமும் கடிதமும் கிடைத்தன. நன்றி. இனிமேல் நான் பண உதவி கேட்கும் போது அரசு வாயிலாக அனுப்ப வேண்டாம். நேரடியாக அனுப்புங்கள். மோசக்காரர்கள். தாங்கள் அனுப்பியதில் பாதியை ஜீரணித்துவிட்டு மீதியைக் கொடுக்கிறார்கள்!''

தகவல்: வைதேகி.



# 6 மணி நேரம்

ஜெயா லாட்ஜுக்கு எதிரில் இருக்கும் வங்கி ஒன்றின் இன்றைக்குப் பெரும் போலீஸ் பாதுகாப்பு தரப்பட்டிருந்தது.

காரணம் என்ன?

காலை மணி பத்துக்கு வந்த ஒரு மொட்டைக் கடிதம்தான். ஆமாம். ''இன்னும் ஆறு மணி நேரத்தில் குண்டு வெடிக்கும்! அசட்டையாக இருந்தால் பல உயிர்களை நினைத்துப் பரிதாபப் பட வேண்டியிருக்கும்''

யாரோ

மொட்டைக் கடிதத்தைக் கண்டவுடன் மானேஜர் வெல வெலத்துப் போய்விட்டார். மின்னல் வேகத்தில் போலீஸுக்குத் தகவல் பறந்தது. அனைத்து ஊழியர்களும் வெளியேறக் கட்டளை பிறந்தது. பாங்க் கௌண்டர்களும், வாசல் கதவும் மூடப்பட்டன.

அதே சமயத்தில் எதிரில் இருந்த ஜெயா லாட்ஜின் ரூம் நெம்பர் எட்டில் நானும் என் சக நண்பர்களும் போலீஸாரின் பரிதாப நிலைமை எண்ணி அனுதாபப் பட்டோம்.

●   ●   ●

கேசவனிடமும் பிறதன் பார்சனிடமும் நான் பந்தயமும் கட்டிய தன் வினைதான் வங்கியிலே அந்தப் பரபரப்பு.

''நாளைக்கு நீ இந்த டவுனே ஆச்சரியப் படும் அளவுக்கு, த்ரில்லான முறையில் ஒரு சம்பவத்தை நடத்தணும், முடியுமா?''

''ஓகே!''

இப்படி சவாலை ஏற்றுக் கொண்டதுதான் அந்த மொட்டைக் கடிதத்துக்குக் காரணம்.

●   ●   ●

''டேய் கேசவா, எதிரிலுள்ள வங்கியைப் பார். என்ன பாடு படுதுன்னு. போலீஸ்காரங்களைப் பாரு. கதி கலங்கிப் போய் நிக்கிறாங்க. இப்ப என்னடா சொல்றே?'' எடுடா நூறு ரூபாயை!

''மதிப்புக்குரிய சகல கலா வல்லவனே, இப்ப நாங்க நெனச்சம்னு நீ ஜெயில் கம்பிகளை எண்ண வேண்டியிருக்கும்.''

''டேய்... நான் மட்டும்தான் கம்பி எண்ணுவேன்னு நெனச்சியா? ஐடியாக் கொடுத்ததே நீங்கதான்னு கதை கட்டிருவேன், ஜாக்கிரதை!''

''அடேங்கப்பா, நீ செஞ்சாலும் செய்வேடா.'' தன் தோல்வியை ஏற்றுக்கொண்டான் கேசவன்.

மாலை மணி நான்கு.

பாங்க் முழுவதும் சோதனை போட்டதில் வெடிகுண்டு ஏதுமில்லை.

நான் ஒன்றும் தெரியாதவன் போல் போலீஸார் பேசிக் கொண்டிருந்ததையே கவனித்துக் கொண்டு நின்றேன்.

அப்போது அருகில் இருவர் பேசிக்கொள்வது என் காதில் விழுந்தது.

''என்ன கண்ணுசாமி, எந்தப் பாவியோ இப்படிப் புரளியைக் கிளப்பி என்னை இப்படித் தவிக்க விட்டுட்டானே... நாளைக்கு என் பொண்ணுக்குக் கல்யாணம். பந்தல்லே பத்தாயிரம் வெக்கிறேன்னு மாப்பிள்ளை வீட்டாரிடம் சொல்லியிருந்தேன். பாங்கில் போட்டிருக்க பணத்தையும் இன்னிக்கு எடுக்க முடியல்லே.''

''நாளைக்கி என் மனைவிக்கு வயித்து ஆபரேஷன். பெரிய ஆஸ்பத்திரியில் செய்யிறதா இருந்தோம். அதுக்குச் செலவுக்கு பாங்கில் போட்டிருக்க பணத்தை எடுக்க வந்தேன்.''

இப்படி அந்த இருவரும் தம் கஷ்டங்களைச் சொல்லி வேதனைப் பட்டுக்கொண்டு சபித்தபோது திடீரென்று சட்டை ஜேபியிலிருந்து நூறு ரூபாயும் நூறு கிலோ எடைக் கற்களாகக் கனக்க ஆரம்பிக்கவும் சரிந்தேன் நான்.

பேராவூரணி. பெத்தையன்







1985 ஜனவரி 6
மலர் : 43 இதழ் : 23
ரக்தாக்ஷி மார்கழி 22
கல்கி

# இந்த முடிவு நல்லதல்ல

பிரதமர் ராஜீவ் காந்திக்கும் முதல்வர் எம். ஜி. ஆருக்கும் நமது மனப்பூர்வமான நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கூடவே இந்தத் தேர்தல் முடிவுகள், நாட்டுக்கும் ஜனநாயகத்துக்கும் நல்லதுதானா என்ற சந்தேகமும் எழுகிறது. ஜனநாயகத்தில் பலமான ஆளும் கட்சியோடு சக்தி வாய்ந்த எதிர்க்கட்சியும் இருப்பதுதான் நல்லது. ஆனால் இந்தத் தேர்தல் முடிவுகளோ முன்னெப்போதும் இல்லாத அளவில் மத்தியில் இ.காங்கிரஸுக்கும் மாநிலத்தில் அ. இ. அ. தி. மு. க. வுக்கும் பெரு வெற்றிகளைக் குவித்து எதிர்க்கட்சிகளை இருந்த இடம் தெரியாமல் செய்திருக்கிறது. இதனால் ஜனநாயகம் பலவீனமடையும் என்பதும் ஆளும் கட்சிகளின் யதேச்சாதிகாரப் போக்குகள் மேலும் வலுப்படும் என்பதும் எதிர்பார்க்கக் கூடியதே. அதோடு ஒழுங்கீனங்கள், லஞ்ச ஊழல்கள் அதிகரிக்கும் எனவும் கருதலாம். நமது இந்த ஐயம் பொய்த்துப் போனால் மகிழ்ச்சியே. அப்படிப் பொய்த்துப் போகிற அளவில் வென்றவர்கள் அஞ்சி நடப்பார்களா? பெருந்தன்மையும், திறமையும், அடக்கமும், நேர்மையும் கொண்டு செயல்படுவார்களா?

எதிர்க்கட்சிகளின் சராசரி வேட்பாளர்கள் மட்டுமின்றி தலைவர்களிலும் சரண்சிங் போன்ற ஓரிருவரைத் தவிர மற்ற அனைவரும் படுதோல்வி அடைந்துள்ளனர். ''செழியன், பகுகுணா, ஜெத்மலானி போன்ற சிலரை எதிர்த்துச் சினிமா நட்சத்திரங்களை நிறுத்தியிருக்க வேண்டுமா? இவர்கள் நாடாளுமன்றம் வர வழி வகுத்திருக்கக் கூடாதா?'' என்றால் ''முதலில் என். டி. ஆரை அரசியலிலிருந்து விலகச் சொல்லுங்கள்'' என்று பதில் கிடைக்கலாம். ஆனாலும் இவர்களும் வாஜ்பாயி, சந்திரசேகர் போன்ற வேறு பல பெருந்தலைவர்களும் நாடாளுமன்றத்தில் இல்லாமல் போவது தேசத்துக்கே நஷ்டம்தான்.

இதற்கெல்லாம் வாக்காளரை மட்டும் குறைகூறிப் பயனில்லை. சினிமா மோகம், அனுதாப அலை, தனிநபர் பிரபை என்று காரணம் சொல்லியும் பிரயோஜனமில்லை. கல்வி அறிவு அதிகமில்லாத பெரும்பாலான வாக்காளர்கள் பல்வேறு கட்சிக் கொள்கைகளை எடை போட்டுச் சிந்தித்துச் செயல்படாமல் உணர்ச்சி வசப்பட்டு இயங்குவதிலும் வியப்பில்லை. இதெல்லாம் தெரிந்திருந்தும் எதிர்க்கட்சித் தலைவர்கள் சரியாக நடந்து கொள்ளாமல் போனதுதான் வியப்பு. இவர்கள் ஒன்றுபட்டு ஓர் அடிப்படைத் திட்டத்தின்கீழ் ஒரே குரலாக ஒலிக்காததன் மூலம் தங்களைத் தாங்களே அழித்துக் கொண்டதுடன் ஜனநாயகத்துக்கும் பெருந்தீங்கு இழைத்துவிட்டார்கள். மக்களுக்கு நன்மை செய்வதற்காக ஜே. பி., கிருபளானி போன்றவர்கள் அரும்பாடுபட்டு இவர்களுக்கு அமுதசுரபியைப் பெற்றுத் தந்தார்கள். அதை இவர்கள் பல சுக்கலாக உடைத்தெறிந்தது மட்டுமல்ல, உடைந்த துண்டங்களைப் பொறுக்கி எடுத்து ஒட்ட வைக்கக் கூட இவர்கள் தயாராயில்லை என்னும்போது மக்கள் இவர்களை ஆதரிப்பது ஆபத்து என்ற முடிவுக்கு வந்திருந்தால் அதிலும் ஒரு நியாயம் இருக்கத்தானே செய்கிறது!

பலத்த அடிவாங்கியுள்ள எதிர்க்கட்சிகள் சோர்ந்து போய் விடாமல் தங்கள் பணி முன்னெப்போதையும்விட கஷ்டமானது என்பதுடன் அத்தியாவசியமானது என்பதையும் உணர்ந்து செயலாற்றட்டும். தங்களிடையே ஒற்றுமைக்குப் பாடுபடுவதுடன் ஒரு புதிய இளம் தலைமுறைத் தலைவர்களை அடுத்த தேர்தலுக்குள் உருவாக்கவும் நடவடிக்கை எடுக்கட்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்




# ராகமாலிகா பட்டு சேலைகள்

சுகன் ஆர்கேட்,

நெ. 12பி, நாகேஸ்வரராவ் ரோடு, பனகல் பார்க் அருகில்

தியாகராய நகர், சென்னை-600 017

(ஞாயிறு கடை உண்டு)

# கமல் பதில்கள்

## நேரம் நல்ல நேரம்

29. போன வாரம் ஒரு கேள்விக்குப் பதில் சொல்லும்போது, உங்கள் வெற்றிக்குப் பின்னால் மூன்று பெண்கள் இருக்கிறார்கள் என்று சொன்னீர்களே...?

அதுல வேற ஏதாவது கற்பனை செய்து கொண்டவர்களுடைய கற்பனையின் தரத்தை திறத்தை அல்ல — தரத்தைக் கொஞ்சம் சந்தேகிக்கும்படியாக இருக்கிறது. மூன்று பெண்கள் என்று சொல்லும்போது, வழக்கமாக ஒரு மனிதனுக்குப் பின்னால் இருக்கும் நங்கை மனைவியாகத்தான் இருக்க வேண்டும் என்பது பரவலாக இருந்து வரும் ஒரு கருத்து. தாயை மறந்துவிடுகிறார்கள்! அது ஒரு முக்கியமான ஸ்டார்டிங் பாயின்ட். அந்த பாயின்ட் இல்லேன்னு ஸ்டார்ட்டிங்கே இல்லே. என்னுடைய ஆரம்ப காலத்தில், என்னை விட என் மேல் அதிக நம்பிக்கை வைத்திருந்தாள் என் தாய். 'இதை என்னால செய்ய முடியாது'ன்னு சொன்ன போது, 'முடியும்னு' ஊக்குவித்தவள். 'எனக்குப் படிப்பும் வரலே, நடிப்பும் வரலே. என்னடா பண்றது!'ன்னு இருந்த போது, 'நீ குப்பை கொட்டப் போ. அதைப் பத்தி நான் ஒண்ணும் சொல்லலே. ஆனா குப்பை கொட்டற திலேயும் மெட்ராஸ்லேயே, அல்லது இந்தியாவிலேயே சிறப்பாகக் குப்பை கொட்டுபவன் என்று பெயர் வரட்டும்!' என்று சொன்னாங்க அம்மா. அந்த அம்மாவை என்னுடைய வெற்றிக்குப் பின்னால் இல்ல என்று சொல்வது பொய்யாகிவிடும். அதற்குப் பிறகு என்னுடைய அண்ணி. என் தாயாருக்கு உடம்பு சரியில்லாமலிருந்த பொழுது, என் அண்ணியிடம் பால் குடித்திருக்கிறேன்— நான் குழந்தையாக இருந்தபொழுது. ஆக, என் தாய் ஸ்தானத்தில் பாதி அவருக்கு உண்டு. என்னுடைய அண்ணியும் அம்மாவும் ஒரே நேரத்தில் கர்ப்பமாக இருந்த ஒரு தமாஷான காட்சி எங்கள் குடும்பத்தில் இருந்ததாம், சொல்லக்கேட்டிருக்கிறேன். என் அண்ணனுக்கு கல்யாணம் ஆனப்புறம் என் அம்மா என்னைப் பிரசவித்தாள். அப்படி இருக்கும் பொழுது, என் அண்ணியினுடைய முதல் குழந்தை ஒரு நோய்வாய்ப்பட்டு இறந்து விட்ட காரணத்தால் அவர்களின் முதல் குழந்தையாகவும் நான் இருந்து வருகிறேன். ஆக, என்னுடைய வாழ்க்கையில் இரண்டாவது ஊக்குவிக்கும் பெண் நபர் அவர். மூன்றாவது... எல்லாருக்கும் தெரிந்த விஷயம்: என்னுடைய பெட்டர் ஹாஃப் வாணி.

30. ஸ்ரீமதி மைதிலி சுந்தரம், ஆலந்தூர், சென்னை.
புராணக் கதாநாயகர்களில் உங்களுக்குப் பிடித்தவர் ராமரா, கிருஷ்ணரா?

இது வேற... இப்பத்தான் மூனு பெண்கள்னு சொல்லியிருக்கேன். அதுக்கப்புறம் ராமர் பிடிக்குமா, கிருஷ்ணர் பிடிக்குமான்னு கேட்டு... இதுல கிருஷ்ணரைத்தான் பிடிக்கும்னு நான் சொல்லி... ஏன் வம்பு? வீட்டுக்குப் போகணும் சார்... அம்மணி, நான் வீட்டுக்குப் போய் என் மனைவியையும் சந்திக்க வேண்டியிருக்கிறது. வம்புல மாட்டி விட்டுடாதீங்க... எனக்கு கிருஷ்ணரையும் பிடிக்கும், ராமரையும் பிடிக்கும், கிருஷ்ணரைக் குசேலருக்கு தர்மம் பண்ணினதுனால பிடிக்கும், ராமரை, சீதையை மட்டுமே அவர் பார்த்ததுனால பிடிக்கும். இப்ப என்ன பண்ணுவாங்க வீட்டுலன்னு பார்த்துடறேன் நான்!

31. எம். எம். அஷ்ரப் அலி, மணப்பாறை.
வசூலைக் குறியாகக் கொண்டு நடக்கின்ற செலலாய்ட் ரேஸுக்கு மத்தியில், டைரக்டர் பாலசந்தர் போன்றவர்களின் ஒத்துழைப்புடன், ஊதியம் வாங்காமல், அவார்டு கிடைக்கும்படி ஒரு தமிழ்ப்படத்தை உருவாக்க நீங்கள் ஏன் முயற்சி செய்யக் கூடாது?

அஷ்ரப் அலி அவர்களே, இந்த செலுலாய்ட் ரேஸ் என்று சொல்கிற ரேஸில் நான்

○ "மூன்றும் பிறை மாதிரி படங்கள் வசூலிலும் வெற்றி கண்டு பரிசும் பெற்றுத் தருகின்றன..."



பங்கு கொள்ளவில்லை. நிதானமாக நடந்து சென்று கொண்டிருக்கிறேன். ஏன் என்றால் அவர்கள் ஓடும் ரேஸும், நான் ஓடும் ரேஸும் வெவ்வேறு திசையில், வெவ்வேறு ஸ்பீடில். காரணம், நான் மாரதான் ஓட வேண்டும் என்ற எண்ணத்தில் வந்திருக்கிறேன். இந்த செலுலாய்ட் ரேஸில் வேகமாக ஓடிக்கொண்டிருப்பவர்கள் ஸ்பிரின்டர்ஸ் — நூறு மீட்டர் ஓடக் கூடியவர்கள். அவர்களுடன் என்னை ஒப்பிட்டுப் பார்த்தால், இந்த ஆமை கண்டிப்பாக வந்து சேராதோ என்ற எண்ணம் தோன்றும். ஆக வசூல் ஒரு புறம் இருக்க, அவார்ட் வாங்கும் படங்கள் என்று சொல்லும் பொழுது, ஊதியம் வாங்காமல்தான் செய்ய வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இல்லை. அப்படிப் பார்த்தோமேயானால் எனக்கு ஜனாதிபதி பரிசை வாங்கிக் கொடுத்த படம்— தமிழ்ப்படம் — நான் ஊதியம் வாங்கிக் கொண்டு செய்த படம்தான். ரசிகர்களிடம் வசூலை ஏற்படுத்திய படம் தான். அது தான் உண்மையான வெற்றியோ என்று எனக்குத் தோன்றுகிறது. மற்றவர்கள் பார்க்காமல் இந்த அறிவுஜீவிக் கூட்டம் மாத்திரம் வந்து பார்த்துவிட்டு, ஐந்தாம் வாரத்தில் படத்தைத் தூக்கிவிட்டால், அது உண்மையான வெற்றி இல்லையோ என்று எனக்குத் தோன்றுகிறது. தவறாக இருக்கலாம் அஷ்ரப் அலி, ஆனா கோவிச்சுக்காதீங்க.

ஏன்னா, அந்த அறிவுஜீவிகளுக்காக மட்டுமே படம் எடுக்கப்படும்பொழுது, ஒரு மெஜாரிடியை உதாசீனப்படுத்தி விடுகிறோம். ஒரு மைனாரிடியை உயரே தூக்கிப் பிடித்துக் கொண்டு, மற்றவர்கள் எல்லாம் முட்டாள் என்றுசுட்டிக்காட்டுகிறோமோஎன்றுதோன்றுகிறது. அதனால் 'மூன்றாம் பிறை'' மாதிரி படங்களை ஊதியம் வாங்கிக் கொண்டு செய்கிறோம். ஊதியம், ஊதியம் என்று அடிக்கடி சொல்கிறேனே, சம்பளம் போய்விடுமோ என்று பயப்படுகிறேனோ என நினைக்க வேண்டாம். ஊதியம் வாங்காமல் செய்வதென்பது பெரிய தியாகம் அல்ல. இந்தத் தங்கப்பதக்கம் என்பது, ஒரு தியாகம் செய்தாலே கிடைக்கக் கூடிய பரம வீர சக்கரம் அல்ல, திறமைக்குக் கிடைக்கும் சக்கரம். அப்படி இருக்கும் பொழுது உங்களுடைய ரசனைக்குத் தக்க மாதிரி எங்களுக்கு இந்த விருதுகளும் பட்டங்களும் கிடைக்கின்றன. அதற்கு நீங்கள் தான் ஒத்துழைக்க வேண்டும் அஷ்ரப்அலி போன்ற ரசனையுள்ள பல ரசிகர்களை நீங்கள் தான் வளர்க்கவேண்டும். பொழுது போக்கு என்று வரும்பொழுது, நீங்களே சில சமயம் இன்ன இன்ன படங்களைத்தான் பார்ப்பேன் என்று மனசுக்குள் எண்ணத்தை வளர்த்துக் கொண்டு, சென்ட் போட்டுக் கொள்வது மாதிரி, ஒரு பெருமைக்கு நானும் அறிவுஜீவிதான் என்று காட்டிக் கொள்வதற்காக, ஒரு அழகான படம் பார்க்க வேண்டும் என்று ஒரு இரட்டை வேடம் போடும் பொழுது, இந்தப் பிரிவு — பிரிவினை இருக்கத் தான் செய்யும். இது இங்கே பல நாட்களாக இருந்து வரும் ஒரு வியாதி. இதைக் கடந்து விட்டதால்தான் ஹாலிவுட் உலகப் புகழ் பெற்றது.

32. கே. கணேஷ், சென்னை.
நீங்கள் பார்த்த திரைப்படங்களில் ஏதாவது ஒரு கதாபாத்திரம் உங்கள் உள்ளத்தைப் பாதித்ததுடன், அந்தப் பாத்திரத்தில் நடிக்கும் வாய்ப்பு நமக்குக் கிடைக்காமல் போய்விட்டதே என்று ஏங்க வைத்த அனுபவம் உண்டா?

என்னைப் பொறுத்த வரையிலும் நான் ஒரு பேராசைக்காரன். நான் சில பத்திரிகைகளில் சொல்லியிருக்கிற மாதிரி ஒரு பாத்திரலோலன் — ஸ்த்ரீலோலன் மாதிரி! மற்றவர்கள் செய்கிறகாட்சிகளைப் பார்க்கும்போது முக்கால்வாசி நல்ல படங்களைப் பார்க்கும் போது, இதை நான் செஞ்சிருக்கக் கூடாதா என்ற பேராசை வரும். அதற்கான தகுதி திறமை, இருக்கிறதா என்றெல்லாம் தோன்றாது. 'வாக்கிங் டால்' என்றொரு படம்... ஐந்தடி எட்டங்குலம் இருந்து கொண்டு 'வாக்கிங் டால்' என்ற படத்தை நான் செய்தால் எப்படி இருக்கும் என்று கற்பனையில் ஆழும் ஒரு அற்பத்தனம் எனக்கு உண்டு. 'வாக்கிங் டால்' என்ற படத்தில் 6 அடி 7 அங்குலத்தில் ஒரு கதாநாயகன் நடித்திருக்கிறான். அந்தப் பாத்திரத்துக்கு முதற்கொண்டு ஆசைப்படும் ஒரு அகோரப் பசி எனக்கு உண்டு.

33. கே. கமலா, தஞ்சாவூர்.
எம். ஆசியா பேகம், சின்னதாராபுரம்.
நீங்கள் திரையுலகுக்கு வந்தபின் எல்லா சிறப்புகளையும் அடைந்திருக்கிறீர்கள். ஒவ்வொரு முறை பரிசு வாங்கும்போதும் அதைப் பார்த்து மகிழ நம் அன்னை இல்லையே என்று வருந்தியிருக்கிறீர்களா?

வருந்தியிருக்கிறேன். இன்னும் என்னை வளர்த்துவிட்ட பல நண்பர்கள் இல்லையே, என் குருநாதர்களில் ஒரு சிலர் இல்லையே என்று வருந்தியிருக்கிறேன். அதைப்பற்றி.. அடுத்த வாரம் சொல்லுகிறேன்.

தொகுப்பு: சித்தார்த்

நீண்ட தூரம் செல்லும் டிரைவர் சில சமயம் தூங்கி விடுவார். இதனால் ஏற்படும் விபத்தைத் தவிர்க்க இஸ்ரேல் நாட்டில் புதுவகை மூக் கண்ணாடியை உருவாக்கி இருக்கிறார்கள். இக்கண்ணாடியை அணிந்து செல்லும் டிரைவர் தூங்க ஆரம்பித்தால், உடனே அலாரமணி அடிக்க ஆரம்பித்து விடும்.

நன்றி: இஸ்ரேல் நியூஸ்.
தகவல்: சண்முக சுந்தரம்.



# ஒரே மாத்திரை
# வலி விரைவில் நீங்கிவிடும்



# ஸ்டாபேக்




தலைவலி, உடல் வலி, பல்வலி, கால்,
கை உளைச்சல் ஜுரம் முதலியவற்றிலிருந்து
சிறந்த நிவாரணம் அளிக்கிறது.

Adept-M/PP/101/84

# எருக்கம் மலர்

இந்துமதி

## 23

அனந்தசாமியும், கிருத்திகாவும் கிளம்பிப் போய் மோட்டார் ரிப்பேருக்குச் சொன்னார்கள். அப்படியே எவர்சில்வரில் சமைப்பதற்குச் சில பாத்திரங்களும், ஒரு நல்ல திரி ஸ்டவ்வும் வாங்கினார்கள்.

''மாமா, கூடவே சமையற்கலை புஸ்தகம் ஒண்ணும் வாங்கிண்டு போயிடலாம்.. அதைப் படித்துப் பார்த்துச் சமைக்கச் சௌகர்யமாக இருக்கும்...'' என்றாள் கிருத்திகா.

அனந்தசாமி இன்னமும் நம்ப முடியாதவராகக் கேட்டார்.

''ஏம்மா, நிஜமாகவா நாளையிலிருந்து நீ சமைக்கப் போறதாகச் சொல்றே...?''

''என்ன மாமா நீங்க...? இன்னும் சந்தேகப்படறீங்க... நான் உங்க கூடத்தான் இருக்கப் போறேன். உங்க பொண்ணு ஸ்தானத்தில நின்னு சமைச்சுப் போடப் போறேன்...''

''அது சரிம்மா. உங்கம்மாவிற்கு நீ இங்கே வந்திருப்பேன்னு ஊகிக்க முடியாதா...? நேரில் வந்து சமாதானப்படுத்தி அழைச்சுண்டு போகநினைக்கமாட்டாளா..?''

''அவ நினைக்கலாம் மாமா. ஆனால் அதே மாதிரி நானும் நினைச்சுணுமில்லையா...?''

''இல்லேம்மா... என்ன இருந்—''

''மாமா. இந்தப் பேச்சை விட்டுட்டு வேற ஏதாவது பேசலாமே... ப்ளீஸ்...?''

''சரிம்மா. இப்பவே மணி நாலராகப் போறது. பஸ் பிடிச்சு பெஸன்ட் நகர் போக இன்னும் நாற்பது நிமிஷத்துக்குமேல் ஆகும். இறங்கி வீட்டுப் பக்கத்துல இருக்கிற மளிகைக் கடையில் சாமானுக்குச் சொல்லிவிட்டுப் போயிட்டால் டாண்ணு காலை எட்டு மணிக்குக் கொண்டு வந்து போட்டுடுவான்...''

''சரி மாமா... ஆனால் ஒண்ணு, சமைக்கிறபோது நீங்க எனக்குக் கொஞ்சம் உதவி பண்ணணும்...''

''நான் கூட பண்ண வேண்டாம். சாயிராம் எல்லா உதவியும் பண்ணிடுவான். ரொம்ப நல்ல பிள்ளையம்மா...''

''ஏன் மாமா நான் வந்ததிலிருந்து இதுவரை சாயிராம், சாயிராம்னு நூறு தரம் சொல்லிட்டீங்களே... யார் மாமா அது...?''

''வா முதல்ல டெர்மினஸுக்குப் போய் பஸ்ல ஏறி உட்கார்ந்தப்புறம் அவன் கதையைச் சொல்றேன்.''

அவர்கள் பாரீஸ் கார்னரின் முனைக்கு வந்து பஸ்ஸின் ஜன்னல் ஓர இருக்கையில் உட்கார்ந்து கொண்டனர். சாமான் பையைக் காலடியில் வைத்து விட்டு அனந்தசாமி சாயிராமைப் பற்றி ஒன்று விடாமல் சொன்னார்.

''நல்ல பையன்ம்மா... ரொம்ப நன்னா கவிதை எழுதுறான். பி. ஏ. படிச்சிருக்கான். சினிமாவுக்குப் பாட்டெழுதற ஆசையில் வீட்டையும், ஊரையும் விட்டு ஓடி வந்துட்டான். ஏழைப் பையன்தான்... வாழ்க்கையில் நல்லபடியா அவன் முன்னேறணும்னு ஆசைப்படறேன்...''

''ஏன் மாமா, சினிமாப் பாட்டெல்லாம் கவிதையாகி விடுமா...?''

''இதோ பாரும்மா. இந்தச் சர்ச்சையெல்லாம் அவனோட வெச்சுக்க. எனக்குக் கவிதைக்கும், பாட்டுக்கும் வித்தியாசம் தெரியாது. நல்லதா நாலு வரி வந்தால் ரசிக்க மட்டும் தான் தெரியும். போனவுடன் சாயிராம் வந்திருப்பான். அறிமுகப் படுத்தறேன். எல்லாச் சந்தேகங்களையும் கேளு...''

பெஸன்ட் நகரில் இறங்கி, மளிகைச் சாமானுக்குச் சொல்லிவிட்டு வீட்டுக்குப் போன போது வாசல் வராந்தாவில் புவனேஸ்வரி காத்துக் கொண்டிருந்தாள். அவளைப் பார்த்துக் கிருத்திகாவின் புருவங்கள் இலேசாய்ச் சுருங்கின. அனந்தசாமியின் முகம் எந்த பாவத்துக்கும் மாறவில்லை. அதே புன்னகை ஓட, '' சௌக்கியமா...?'' என்று மட்டும் விசாரித்தார்.

''ம்... ம்...'' என்று வாயைத் திறக்காமல் தலையசைத்த புவனேஸ்வரி,

''நீங்க ஏதோ ஹாஸ்டல் நடத்தறீங்கன்னு நெனைச்சேன். ஆனால், 'வீட்டை விட்டு ஓடி வந்த பெண்களுக்கெல்லாம் அடைக்கலம் தர்றீங்கன்னு இப்பத்தான் புரியறது...'' என்றாள் வேண்டுமென்றே...

அதைக் கேட்டும் அனந்தசாமி முகம் சுளுங்கவில்லை. அவளது வார்த்தைகளைப் பொருட்படுத்தவில்லை. அதன் உஷ்ணத்தில் கருண்டு போய் விடவில்லை.

''உள்ளே வாங்களேன் பேசுவோம். இப்படி வாசல்ல நின்னு பேசுவானேன்...?'' என்று சொல்லி உள்ளே கிருத்திகாவுக்கென்று ஒதுக்கின அறைக்குள் அவளை அழைத்துக் கொண்டு போனார். பின் கிருத்திகாவைப் பார்த்து, ''நீ அம்மாவோடு பேசிக் கொண்டிரு கிருத்திகா. நான் காப்பி

கலந்து கொண்டு வரேன்...'' என்று அவர்களைப் பேசவிட்டு வெளியேறினார்.

அவர் போனதும் புவனேஸ்வரி கண் கலங்கக் கிருத்திகாவின் அருகில் போய் அவள் கையைப் பற்றிக் கொண்டு மெதுவாய்க் குரலைத் தழைத்துக் கொண்டு கேட்டாள்.

''நீ இப்படிப் பண்ணலாமா கீர்த்தி...?''

கண்களில் ஒரு துவேஷம் எட்டிப் பார்க்கச் சடாரென்று தலைநிமிர்ந்து அவளைப் பார்த்தாள் கிருத்திகா.

''என்ன பண்ணினேன்...? தப்பாக ஒன்றும் பண்ணலையே...?''

''தப்புன்னு இல்லைன்னாலும் வீட்டை விட்டு வரலாமா...?''

''என்ன செய்யறது. இருக்கும்படியான சூழ்நிலையில் வீடு இல்லையே...?''

அதற்கு உடனே பதில் சொல்லிவிடவில்லை புவனேஸ்வரி. சிறிது நேரம் தலையைக் கவிழ்ந்து பேசாமல் உட்கார்ந்திருந்தாள். சில நிமிடங்கள் அப்படியே இருந்து விட்டுப் பின் கிருத்திகாவின் முகத்தை ஏறிட்டுப் பார்த்துக் கூப்பிட்டாள்.

''வா... வீட்டுக்குப் போகலாம்...''

''ம்ஹூம். இனி நான் அங்கே வர்றதாக இல்லை. எனக்கு அங்கே பாதுகாப்பு இல்லை. நீ பழகற மனிதர்களை எனக்குப் பிடிக்கவில்லை...''

''நீ யாரைச் சொல்றேன்னு எனக்குப் புரியறது கிருத்திகா. இனி விஷ்ணுபிரஸாத் நம் வீட்டுக்குள் நுழைய மாட்—''

''ஒரு நிமிஷம்மா... நம் வீடுன்னு சொல்லாதே... அது தப்பு... அது உன்னுடைய வீடு... உன் சம்பாத்தியத்தில் நீயே வாங்கினது. அதனால் அதில் உனக்குப் பிடித்தவர்கள் வருவதில் தவறில்லை. எனக்காக நீ யாரையும் வர வேண்டாமென்று தடுக்க வேண்டாம். எனக்குப் பிடிக்கலை. என்றால் நான் ஒதுங்கிக்கறதுதான் சரி. அதனால் நான் ஒதுங்கி வந்து விட்டேனே தவிர வேறு எதுவும் சொல்லவில்லை.... யாரையும் வரக் கூடாது என்று சொல்லவில்லை...''

''வேணும் கீர்த்தி...'' என்று குபீரென்று அழத் தொடங்கினாள் அவள்.

''இப்படியெல்லாம் பேசாதே கிருத்திகா. நான் பண்ணினது தப்பாக இருக்கலாம்.



ஆனால் அந்த நேரத்துக்கு எனக்கு வேறே வழி எதுவும் தெரியலே. உன்னைக் காப்பாத்தற வழி தெரியலே. உன்னை நல்லபடியா, நன்னு வாழ வைக்கணும், உனக்கு எந்தக் கஷ்டமும் தெரியக் கூடாது. நீ சௌக்கியமா இருக்'ணும்னு நான் இத்தனையும்.... இத்தனையும்...''

அவன் தடுமாற அதுவரையில் தன்னை அடக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்த கிருத்தி காவுக்குக் கோபத்தில் முகம் சிவந்து உதடுகள் துடித்தன.

''அதுக்காக இத்தனையும் செய்தேன்னு சொல்ல உனக்கு வெட்கமாக இல்லே...? ஏம்மா, வாழ இது ஒன்றுதான் வழின்ற முடிவுக்கு எப்படி, உன்னால் வர முடிஞ்சது...? அதுதான் வழின்னால் உலகத்துல தனியா நிற்கிற பெண்கள் எல்லாரும் விஷ்ணு பிரசாத் மாதிரி ஏதோ ஒருத்தனைப் பிடிச் சுண்டா முன்னுக்கு வந்தாங்க...? ஏம்மா, முதல்ல முன்னுக்கு வர்றது என்றால் என்ன.? பங்களா, கார், சொகுசான வாழ்க்கை இதுதானு...? இதற்காக எதையும் பணயம் வைக்கிற நினைப்பு உனக்குள் எப்படி ஏற் பட்டது? அதைவிட நாலு வீட்டில் சமையல் செய்து என்னைக் காப்பாற்றியிருந்தால் நான் உன்னைப் பற்றிப் பெருமையாக நினைத்திருப்பேன். சந்தோஷப்பட்டிருப்பேன். என் அம்மா என்னை உழைத்துப் படிக்க வைத்திருக்கிறாள் என்று சொல்லிச்சொல்லிப் பூரிப்படைந்திருப்பேன்... ஆனால்..... இப்போ எவனோ ஒரு விஷ்ணு பிரசாத் இளிச் சுண்டே சொல்றான். 'உங்கம்மாவுக்கு டில்லிக்கு வந்தால் நான். அதே மாதிரி கல்கத்தா, பம்பாய்னு போனால் யார் யாரோ... நீ எப்படி? உங்கம்மா மாதிரி புத்திசாலியா...? இல்லே, அவளை விடச் சாமர்த்தியசாலியான்'னு கையைப் பிடிச்சு இழுக்கறான்...

''எதனால் அவனுக்கு அந்தத் தைரியம் வந்தது...? உன்னால்தானே...? உன் பெண் உன்னை மாதிரியே இருப்பான்னு தப்புக் கணக்குப் போட்டதால்தானே...? இதோ பாரு, இப்போ சொல்றேன் கேட்டுக்க... நான் படிப்பு வேணும், பங்களா வாசம் வேணும், தவறான வழியில் சம்பாதித்த அந்தப் பணத்தில் காலணக் காசு வேண் டாம், எவனு ஒரு ஸ்த்ரீலோலனைப் போய்ப் பாரு என்று வற்புறுத்தி அனுப்பிய அந்த அம்மா கூட வேணும்னு எல்லாத்தை யும் உதறிட்டு ஓடி வந்திருக்கேன். இங்கே நிம்மதியா, பாதுகாப்பாக இருக்கலாம்னு வந்திருக்கேன். இங்கேயும் வந்து என்னைத் தொந்தரவு படுத்தாதே. இனி நான் உன் வீட்டுக்கு எக்காரணம் கொண்டும் வர்றதாக இல்லே. அதற்குள் காலடி வைக்கவே என் மனசு கூசுகிறது. உன்னைப் பார்க்கக் கூசறது. தயவு செய்து என்னை என் வழியில் போக விடு... இனி மேலும் நான் குழந்தை இல்லே. என்னை என்னால் பாதுகாத்துக் கொள்ள முடியும். அதனால் என்னை வற்புறுத்தாதே... ப்ளீஸ் விட்டு விடு...''

மௌனமாய்க் கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்த புவனேஸ்வரிக்கு அவளின் குரலில் தொனித்த உறுதியும், பிடிவாதமும் ஆச்சரியத்தையே ஏற்படுத்தின. 'நம் கிருத்திகாதானு இவள்...?' என்கிற சந் தேகம் வந்தது. ஒரு பக்கம் பெருமையாக வும் இருந்தது. தன்னைப் போல் வளைந்து கொடுக்கிறவள் இல்லே இவள் என்பதில் சந் தோஷமும் வந்தது. ஆனாலும் அவள் இல்லாமல் இருப்பது என்பது இயலாத தாகப் பட மீண்டும் கெஞ்ச ஆரம்பித்தாள்.

''எது எப்படியானாலும் நீ வீட்டுக்கு வந்துவிடு கீர்த்தி. இனி எந்தத் தப்பும் நடக்காதுன்னு நான் சத்தியம் பண்ணித் தரேன். இருக்கிற பணம் போறும். இனி மேல் நான் கச்சேரிக்குக் கூடப் போகலே—''

''நான் கச்சேரிக்குப் போறதைத் தப்புச் சொல்லலே. கச்சேரி மட்டும் என்று இருந் திருந்தால் கௌரவமாக இருந்திருக்கலாமே என்றுதான் நினைத்தேன்...''

''இனி அப்படியே இருக்கேன் கீர்த் தி... என்னை நம்பு கீர்த்தி... தயவு செய்து வீட் டுக்கு வா...''

''இல்லே...'' என்று தலையாட்டினுள் அவள். ''நீ என்ன சொன்னாலும் இப்போ நான் வர்றதாக இல்லே. எனக்குக் கொஞ்சம் மனசு சரியில்லே. என்னை என் போக்கில் விடு... சற்று முன்பு சொன்ன மாதிரி முதலில் உன்னால் இருக்க முடியறதான்னு பாரு... அப்படி இருக்க முடியும்னு அனைப்புறம் என்கிட்டே வந்து சொல்லு. எனக்கும் நீ சொல்றது நிஜம்னு, சரின்னு தோன்றினால் அதற்கப்புறம் நானும் உன்னுடன் வர்றதைப் பற்றி யோசிக்க றேன். அதுவரை இங்கேயே இருக்கேன். துணைக்கு அனந்தசாமி மாமா இருக்கார்.

---

நடிகை ஜினு லல்லப்ரிகிடா உணவு விடுதியொன்றில் சாப்பிடப் போன போது வறுக்கப்பட்ட இறால் மீனுடன் ஒரு சிறுகல் வாயில் கடிபட்டது. பல் உடைந்து விட்டது. இதனால் ஏற்பட்ட வலி காரணமாக அவர் திட்டமிட்டிருந்தபடி இத்தாலிக்குப் போய் ஒரு 'ஃபாஷன் பரேட்'இல் கலந்து கொள்ள முடியவில்லை.

பல் விவகாரம் கோர்ட்டுக்குப் போயிற்று. தீர்ப்பு: உணவு விடுதிக் காரர்கள் ஜினுவுக்குத் தர வேண்டிய நஷ்ட ஈடு தொண்ணூறு ஆயிரம் டாலர்.

நம் ஊரில் சாப்பாட்டில் மலையே கிடக்கிறது. யார் கேட்பது?

—லெஸ்.



இவர் பல் உடைந்தால் பத்து லட்சம்

உனக்குத் தோன்றுகிறபோது நீ வந்து பாரு...''

அவள் மனத்தை மாற்ற முடியாது என்பதைப் புரிந்து கொண்ட புவனேஸ்வரி அழுகை கலந்த குரலில் கேட்டாள். ''என்னைப் பார்க்கக் கூட நீ அந்த வீட்டுக்கு வர மாட்டியா...?''

''ஸாரி... அதான் நீ வான்னு சொல்றேனே...''

''இதுதான் உன் முடிவான பதிலா கீர்த்தி...?''

''என்னைப் பற்றி உனக்கே நன்றாகத் தெரியும். இல்லையா...?''

''அப்போ நான் வரட்டுமா...?''

''இதோ காப்பி கொண்டு வந்துட்டேன். சாப்பிட்டுவிட்டுப் போகலாம்...'' என்று சொல்லிக் கொண்டே அனந்தசாமி மூன்று டம்ளர் காப்பியுடன் உள்ளே நுழைய, வேண்டாமென்று தலையாட்ட நினைத்த புவனேஸ்வரி காப்பி டம்ளரைக் கிருத்திகா எடுத்துக் கொடுத்தவுடன் மறுக்காமல் வாங்கிக் கொண்டாள். ஒரே மூச்சில் குடித்து முடித்துப் பின் அனந்தசாமியைப் பார்த்துச் சொன்னாள்.

''குழந்தை கொஞ்ச நாள் உங்க கூட இருக்கணும்னு ஆசைப்படறா... ஜாக்கிரதையாகப் பார்த்துக்கோங்க...''

''அந்தக் குழந்தையைப் பார்த்துக்க வேண்டிய அவசியமே இல்லை...'' என்று புன்னகைத்தார் அனந்தசாமி. ''அத்தனை கெட்டிக்காரக் குழந்தை... கவலைப் படாமல் போயிட்டு வாங்க. தண்ணியைத் தடியால் அடிச்ச மாதிரித்தான் இதெல்லாம்னு மனசை இலேசாக்கிக் கோங்க...''

ஒரு விநாடி மௌனமாய்த் தரையையே பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பின் விருட்டென்று எழுந்து கொண்டாள்.

''அப்போ நான் வர்றேன். வரட்டுமா கிருத்திகா...?'' என்று புறப்பட்டாள்.

''நான் போய் ஆட்டோ கூட்டிண்டு வர்றேன்...'' என்ற அனந்தசாமியைத் தடுத்து, ''வேணும் நான் பஸ் பிடிச்சுப் போகலாம்னு இருக்கேன். இன்னும் நாலைந்து நாளில் திரும்பி வர்றேன்...'' என்று அறையை விட்டு வெளியேறிப் புடவைத் தலைப்பால் முதுகைப் போர்த்திக் கொண்டு கேட்டை விட்டு வெளியேறின போது அனந்தசாமியிடமிருந்து ஆழமான பெரு மூச்சு ஒன்று வெளிப்பட்டது. ''என்ன மாமா...?'' என்று திரும்பி அவரைப் பார்த்தாள் கிருத்திகா...

''ஒண்ணுமில்லேம்மா.. உங்கம்மாவைப் பார்த்தாலும் கஷ்டமாகத்தான் இருக்கு..''

''என்ன மாமா பண்றது...?'' என்ற போது கிருத்திகாவின் குரலும் கம்மலாகி வார்த்தைகள் உருத்தெரியாமல் வெளி வந்தன...

(தொடரும்)

# ஆபீஸில் இன்னொரு நாள் மூச்சு முட்டற வேலை... பஸ்ஸிலே வீடு திரும்பறப்போ விழிபிதுங்கற கூட்டம். அப்பாடி! வீட்டுக்கு வந்தா அலுப்புத்தீர குளியல், களைப்பினைப் போக்கி புத்துணர்ச்சியூட்டும் தம்ளர் ஹார்லிக்ஸ்

மால்டெட் பார்லி, முழு ஆடைப் பால் மற்றும் பொன்னிற கோதுமைகொண்ட ஹார்லிக்ஸ் ஒரு சுவையான, சத்தான பானம். ஊட்டச்சத்திற்கு மூலாதாரமான ஒரு லட்சிய பானமென்ற நம்பிக்கையை பெற்றது. எனவே, கடந்த நூறு வருடங்களாக கோடிக்கணக்கான குடும்பங்கள் உலகமெங்கும் ஹார்லிக்ஸின்மேல் நம்பிக்கை வைத்து வருகிறார்கள் என்பதில் ஆச்சரியமில்லை.




புதிய காலத்திற்கேற்ப
புதிய தோற்றம்

**ஊட்டச்சத்துமிக்க பானம்**

8241

# போட்டி உலகம்

ரவிராஜ்குமார் உமாபதி

**தா**ரிணி ஒரு ஹவுஸ் வொய்ஃப்.

அந்த ஹவுஸ், கார்த்திகேயனுக்குச் சொந்தம்.

அந்தக் கார்த்திகேயன், ஏற்றுமதி — இறக்குமதி செய்யும் ஒரு கம்பெனியின் அதிபர்.

அந்தக் கம்பெனியின் அலுவல்களுக்காகக் கார்த்திகேயன் டில்லிக்குப் போயிருந்தார்.

அதாவது இப்போது அவர் டில்லியில் இருக்கிறார்.

இங்கே சென்னையில் —

அவரது மனைவி தாரிணி, லஞ்சை முடித்துக் கொண்டு சிறிதுநேரம் ஓய்வெடுப்பதற்காகப் படுக்கை அறையை நோக்கிப் போன போது—

டெலிஃபோன் மணி அடித்தது.

டில்லியிலிருந்து அவள் கணவர் கார்த்திகேயன் போன் செய்யக்கூடும் என்று நினைத்து ஆவலோடு ரிசீவரை எடுத்தாள் தாரிணி.

ஆனால் போன் கார்த்திகேயனிடமிருந்து வரவில்லை. கம்பெனியில் தலைமை நிர்வாகி சந்தானம் என்பவர் போன் செய்திருந்தார்.

சந்தானத்தின் மேல் தாரிணிக்குத் தனியானதொரு மதிப்பும் — மரியாதையும் உண்டு. ஏனெனில் அவளை விட இருபத்திரண்டு வயது மூத்தவரான அவர், தாரிணியை முதலாளியின் மனைவி என்ற கண்ணோட்டத்தில், மேடம் என்று தான் கௌரவமாக விளிப்பார்.

''மேடம்கிட்டே ஒரு விஷயம் பேசணும்.. ஈவினிங் ஆறு மணிக்கு நானும், இன்னும் ரெண்டு மூணு பேரும், வீட்டுக்கு வரலாம்னு இருக்கோம். இஃப் இட் இஸ் கன்வீனியன்ட் ஃபார் யூ...'' என்றார் சந்தானம் மிகவும் அடக்கத்தோடு.

''அஃப்கோர்ஸ்... தாராளமா வாங்க... ஆனா என்ன விஷயம்னு நான் தெரிஞ்சுக்கலாமா...?''

''அதை நேரிலே சொல்றோமே.... நம்ம கம்பெனி விஷயம் தான்...''

தாரிணிக்கு ஒரு சந்தேகம். அவள் கணவன், ஊரில் இல்லாத சமயமாகப் பார்த்து, அவர் கீழ் வேலை செய்பவர்கள், அவளுடன் கம்பெனி விஷயமாகப் பேச வருவதென்றால், அது ஒருவேளை அவள் கணவனைப் பற்றியதாகவே இருக்கும் என்பது அவளுடைய யூகம்.

அந்த யூகத்தை, சந்தானம், தொடர்ந்து சொன்னது உறுதிப்படுத்தியது.

''நாங்க வர்றதுக்கு முந்தி டெல்லியிலே பாஸ்கிட்டேயிருந்து ஃபோன் வந்தா. நாங்க வரப்போறது அவங்களுக்குத் தெரிய வேணும்...''

''சர்டன்லி நாட்... நீங்க வாங்க... ஐ வில் ப்ரிபேர் சம் குட் டிபன்...'' என்று சொல்லிவிட்டு ரிசீவரை வைத்தாள் தாரிணி.

தன் மனசைப் போட்டுப் பெரிதாக அலட்டிக் கொள்ளவில்லை.

அவள் சுபாவமே அப்படி.

மீண்டும் போன் அடித்தது.

இந்த முறை பேசியது அவள் கணவன்— டில்லியிலிருந்து. அங்கு வந்த வேலை முடிந்து விட்டதாம். இன்னும் இரண்டொரு நாட்களில் கோட்டா லைசென்ஸ் கைக்கு வந்து விடுமாம். அதை வாங்கிக் கொண்டு அடுத்த ஃப்ளைட்டிலேயே சென்னைக்குத் திரும்புவதாகக் கார்த்திகேயன் கூறினார்.

தாரிணிக்கு மகிழ்ச்சி தந்த செய்தி அது. கடந்த ஒரு வருஷமாகவே, கம்பெனியின் அலுவல்களை விரிவுபடுத்துவதில் நாட்டம் இல்லாமல், இருப்பதே போதும் என்று இருந்த கார்த்திகேயன், இப்போது டில்லிக்குப் போய், கடும் போட்டிக்கு மத்தியில் இந்தக் கோட்டா லைசென்ஸைப் பெற்றிருப்பது அவளைப் பொறுத்தமட்டில் ஒரு திருப்புமுனையாக மகிழ்ச்சியைத் தந்தது.

அந்த மகிழ்ச்சியில், ஓய்வெடுக்க வேண்டும் என்ற எண்ணம் மறந்து போய், மாலை டிபன் தயாரிக்கும் வேலையில் சமையற்காரியின் உதவியுடன் ஈடுபட்டாள்.

அவள் ஆணையின்படி, சமையற்காரி— டைனிங் டேபிளில் சிற்றுண்டி வகைகளை அழகுற வைத்துவிட்டு வெளியில் போய் விட்டபிறகு— காத்திருந்தாள் தாரிணி.

சரியாக ஆறு மணிக்குச் சந்தானமும் அந்த அலுவலகத்தில் வேலைபார்க்கும் வேறு மூன்று பேரும் வந்தார்கள்.

அமர்ந்திருந்த தாரிணி எழுந்து ''வாங்க.. வாங்க...'' என்று வரவேற்ற கையோடு, ''யூ நோ சம்திங்... கோட்டா லைசென்ஸ் கிடைச்சுட்டதாம். ஐயா போன் பண்ணினார்...'' என்றாள்.

''எஸ் மேடம்...'' என்றார் சந்தானம். ''பாஸ் எனக்கும் போன் பண்ணியிருந்தார்...''

''வாங்க... டிபன் இஸ் கெட்டிங் கோல்ட்...'' என்று அவர்களை டைனிங் டேபிளில் அமர வைத்து டிபன் பரிமாறிய படியே ''வாட் இஸ் தி மேட்டர் மிஸ்டர் சந்தானம்...?'' என்று கேட்டாள் தாரிணி.

''ஒரு சின்னப் பிரச்னைதான்... அதைக் கூட உங்ககிட்டே சொல்றது மேனர்ஸ் இல்

வேன்னு நினைக்கிறோம்... நீங்க எங்களைத் தப்பா நினைக்கக் கூடாது...''

''நாட் அட் ஆல்... நீங்கள் எல்லாம் ஐயா கிட்டே ரொம்ப லாயலா இருக்கிற வங்க...'' என்று தாரிணியும் டைனிங் டேபிளில் அமர்ந்து கொண்டாள்.

''ஆறு மாதத்துக்கு முந்தி சுகந்தின்னு ஒரு பெண்ணை ஐயாவோட பர்சனல் செக்ரட்டரியா அப்பாய்ன்மென்ட் பண்ணச் சொல்லி நீங்க பொரிசு பண்ணினீங்க...'' என்று ஆரம்பித்தார் சந்தானம்.

''ஆமா..'' என்றாள் தாரிணி. ''அந்தப் பெண்ணும் வேலையிலே ரொம்ப் ஸ்மார்ட்டா இருக்கிறதா, ஐயா சொல்லியிருக்கார்..''

''அவளுடைய ஸ்மார்ட்னெஸ்ஸைப்பற்றி யாருக்கும் எந்த சந்தேகமும் இல்லே... ஷி இஸ் ஸ்மார்ட் ஃபாஸ்ட்..எஃபிஷியன்ட்''

''தென் வாட்..?''

''அவ வந்ததுக்கு அப்புறம் ஐயாவோட பிகேவியர் கொஞ்சம் சேஞ்ச் ஆன மாதிரி இருக்கு...'' என்று சந்தானம் சொன்னதும்,

''கொஞ்சம் இல்லே மேடம்... நிறை யவே...!'' என்றார் வேறொருவர்.

''ரியலி...?'' என்று நிஜமான வியப் போடு கேட்டு மெதுவாகச் சிரித்துவிட்டாள் தாரிணி. ''அப்படி என்ன சேஞ்ச் ஆகி யிருக்கு...?''

''அதைத்தான் எப்படி சொல்றதுன்னு தெரியலே மேடம்...'' என்றார் இன்னொரு வர்.

அந்தத் தர்மசங்கடமான சூழ்நிலையிலும் சந்தானத்துக்கு மெதுவாகச் சிரிப்பு வந்தது. மிஞ்சி மிஞ்சிப் போனால் தாரிணிக்கு நாற் பது வயதுக்குள் தான் இருக்கும். ஆனால் எத்தனை பண்பட்ட போக்கு! எவ்வளவு நிதானம்... அதோடு கூட என்ன ஒரு சென்ஸ் ஆஃப் ஹ்யூமர்.

''மேடம்... பாஸ் இப்ப நாற்பத்தஞ்சு வயசைத் தாண்டியிருப்பார் இல்லையா..?'' என்று கேட்டார் சந்தானம்.



தாரிணி சில விநாடிகள் யோசித்தாள். பிறகு "ஃபார்ட்டி நைன்..." என்றாள்.

"அந்தச் சுகந்தி வர்றதுக்கு முந்தி அவருடைய பிஹேவியர் — ஐ மீன் — அவருடைய நடவடிக்கைகள் ஒரு பெரிய மனுஷத் தோரணையிலே இருந்தது. டிரஸ்... மூவ்மெண்ட் எல்லாத்திலேயும் நாம ஒரு பெரிய மனுஷங்கிற உணர்வு ரிஃப்ளெக்ட் ஆச்சு... ஆனா இப்ப...?"

"இப்ப என்னாச்சு....?"

"ஒரு யங்மேன் மாதிரி நடந்துக்கிறார். அவருடைய ட்ரஸ் — பேச்சு — நடந்துக்கிறது எல்லாமே ஏதோ அவருக்கு வயசு திரும்பிட்ட மாதிரி ஒரு ஃபீலிங்கை உண்டாக்கியிருக்கு. முந்தியெல்லாம் காரை அவர் ட்ரைவ் பண்ணவே மாட்டார். ஆனா இப்ப எவ்வளவு டென்ஷனா இருந்தாலும் மரைவரைப் பின் சீட்டிலே உட்கார்த்தி வச்சிட்டு இவர்தான் ட்ரைவ் பண்றார்.. அதிலேயும் நல்ல ஸ்பீட்... இட் லுக்ஸ்.. இட் லுக்ஸ்.." என்று சொல்ல வந்ததைச் சொல்லி முடிப்பதற்கு சந்தானம் வார்த்தைகளைத் தேடிக் கொண்டிருந்த பொழுது—

இன்னொருவர் தொடர்ந்தார்:

"முந்தியெல்லாம் ஈவினிங் நாலு மணி ஆயிட்டாலே வீட்டுக்குத் திரும்புகிற மூட் அவருக்கு வந்துடும். ஆனா இப்ப ஆறு மணி— ஏழு மணி — இன்டெஃபனட்.... பாம்பே கால் என்னாச்சி... கல்கத்தாவிலேயிருந்து டெலக்ஸ் வந்திருக்கான்னு ஆபீஸ்லேயே உட்கார்ந்துக்கிறார். போதாக் குறைக்கு அந்த சுகந்தியையும் இருக்கச் சொல்றார். அவளும் அதுதான் சாக்குன்னு அடிக்கடி பாத்ரூமுக்குள்ளே போறதும் — வர்றதும்..." என்று வேகமாகச் சொல்லிக் கொண்டு வந்தவர் இடீரென்று தம் வேகத்தைக் குறைத்துக் கொண்டு, "சந்தானம் சார் சொன்ன மாதிரி இட் லுக்ஸ் ரியலி அப்நார்மல்.." என்றார்.

"அப்படின்னு இட் இஸ் எ வெல்கம் சேஞ்ச்... நான் எதிர்பார்த்ததும் அதுதான்..."

தாரிணி இதைச் சொன்னதும் வந்திருந்தவர்களுக்குச் சிறிது திகைப்பாக இருந்தது. முதலில் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு பிறகு தாரிணியைப் பார்த்தார்கள். ஆனால் அவர்களில் யாரையும் பார்க்காமல் தலையை இன்னும் குனிந்தவாறே தாரிணி பேசினாள்:

"நான் சொன்ன மாதிரி ஐயாவுக்கு நாற்பத்தி ஒன்பது வயசுதான் ஆகியிருக்கு... ஆனா இதுக்குள்ளேயே அவருக்கு அறுபது வயசுக்கு மேலே ஆயிட்ட மாதிரி ஒரு

பட்டுப் புடவை பரிசுத் திட்டம்

# அசடு வழிந்த அனுபவம்

**போட்டி 36**



வாழ்க்கையில் எல்லோரும் ஏதேனும் ஒரு தருணத்தில் அசடு வழிந்தவர்களே. நீங்களோ, உங்கள் நண்பரோ மிகச் சிறப்பாக அசடு வழிந்த ஒரு வேடிக்கை சம்பவத்தை நினைத்துச் சிரிக்கிற மாதிரி கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்குக் குலுக்கல் முறையில் பட்டுப்புடவை. உறையின் மேல் ''அசடு வழிந்த அனுபவம்'' என்று குறிப்பிடுதல் அவசியம்.

முடிவு தேதி: **21-1-85**

இன்னும் 17 பட்டுப் புடவைகளே பாக்கியுள்ளன. இதில் ஒன்றைப் பெற்றே ஆகவேண்டும் என்ற உறுதியுடன் போட்டிகளில் பங்கு பெறவும்

என் பெயர் ..............................

விலாசம்: ..............................

..............................

ஃபீலிங். எதிலேயும் ஒரு டிடாச்மெண்ட்... கம்பெனி நிர்வாகத்தில் சலிப்பு... கம்பெனி பிஸினெஸ்ஸை டெவலப் பண்ணக் கூடாதான்னு கேட்டா, இருக்கிறதே போதும்.... பெரிசா என்ன பிஸினெஸ்ன்னு அலுப்பு. ஒரு கம்பெனி நிர்வாகிக்கு இது அழகில்லே.. நாளுக்கு நாள் — நிமிஷத்துக்கு நிமிஷம் கம்பெனியை விரிவுபடுத்தறதிலேயே அவருடைய கவனம் இருக்கணும்... ஏன்னா இது ஒரு போட்டி நிரம்பிய உலகம்... பத்து பேரோட நாமும் போட்டி போட்டுக்கிட்டு இருக்கணும்... ஜெயிக்கிறோமா — தோற்கிறோமோ... நோ மேட்டர்... அதுதான் ஸ்பிரிட் ஆஃப் யூத். அது ஐயாகிட்டே சுத்தமா போயிடிச்சின்னு தெரிஞ்சதுக்கு அப்புறம் தான், மாடலா வொர்க் பண்ணிக்கிட்டிருந்த சுகந்திக்கு அந்த வேலையைக் கொடுக்கச் சொன்னேன். ஐ நோ ஷி இஸ் எ ஸ்மார்ட் கேர்ள்... அவளுடைய ஸ்மார்ட்னெஸ் ஐயாவை நிச்சயமா சேஞ்ச் பண்ணும்னு நினைச்சேன்... அவளுக்காகவாவது அவர் ஆக்டிவ்வா இருப்பார்ன்னு எதிர்பார்த்தேன். அது இப்ப நடந்திருக்கு... இல்லேன்னா இப்ப அவர் டில்லிக்குப் போய் பல கம்பெனிகளோடு போட்டியிட்டு அந்த கோட்டா லைசென்ஸை வாங்கியிருப்பார்ன்னு நினைக்கிறீங்களா?''

எல்லோருக்கும் வாயடைத்துப் போன மாதிரி இருந்தது. அவர்கள் சற்றும் எதிர்பாராத ஒரு விளக்கம். ஆனால் இன்னொரு விபரீதம் தாரிணிக்குப் புலப்படாதது போல் சந்தானத்துக்குத் தோன்றியது.

''ஆனா மேடம்... நீங்க ஒரு விஷயத்தை மறந்துட்டீங்க... பாஸ் ஆக்டிவ்வா இருக்கணும்கிறதுக்காக சுகந்தியை அப்பாய்ண்ட் பண்ணச் சொன்னீங்க... ஓகே... நீங்க எதிர்பார்த்த பலன் கிடைச்சிருக்கு... ஆனா நீங்க எதிர்பார்க்காததும் நடக்கலாமில்லையா?'' என்றார் சந்தானம்.

''என்ன அது?''

''அந்த சுகந்தி, உங்களுக்கே போட்டியா உருவாயிட்டா...? ஐ மீன்... அவளுடைய அழகிலேயும் — இளமையிலேயும் பாஸ் முழுக் முழுக்கத் தன்னை இழந்துட்டார்ன்னு....?''

''நான் தான் சொன்னேனே மிஸ்டர் சந்தானம்...'' என்று தாரிணி தலை நிமிர்ந்தாள். ''இஸ் இஸ் எ வோர்ல்ட் ஆஃப் காம்ப்படீஷன்.... எந்தவொரு சின்னச்சின்ன விஷயத்தை எடுத்துக்கிட்டாலும் இது ஒரு போட்டி உலகம். இனிமேல் எனக்கும் சுகந்திக்கும் போட்டிதான். அந்தப் பெண் என் கணவரை என் கிட்டேயிருந்து பிரிக்காமஇருக்கிறதுக்கு நான் எப்படி எப்படியெல்லாம் என்னைத் தயார் பண்ணிக்கணுமோ... அதை தான் செய்யணும்.... ஐ திங்க் ஐ கேன் டூ இட்...''

தாரிணி இதைச் சொல்லிவிட்டு ''எக்ஸ்க்யூஸ் மீ...'' என்று எழுந்து வாஷ் பேஸினுக்குப் போனாள். அங்கே—

கை அலம்பியபோது அவள் தன் கண்களில் துளிர்த்திருந்த கண்ணீர்த் துளிகளைத் துடைத்துக் கொண்டது—

வந்திருந்தவர்களுக்குத் தெரியாது.

கலைகளில் உயர்ந்த கலை

ஜோதிடத்தைக் கற்றிடுங்கள் — கரை சேர்வீர்

# ஜோதிடப்பயிற்சி

தபால் வழி போதனை முறை



நாளை வாழ்வதனில் நறும் நிகழ்ச்சி மலர்ந்திடுமா? நாட்டோர் புகழுகின்ற நாயகனைத் திகழ்வானா? கசடறக் கற்றுத் தேறி காசிட்டும் நிலையில் உயர்ந்து—கைப்பிடித்த மனையாட்டியைக் காத்து—காசினியில் பெருமையுற வாழ்வானா? சொத்து சுகம் சேர்த்து சொர்க்க வாழ்வினை அமைப்பானா? என்றெல்லாம் எள்ளளவும் பிழையின்றிச் சொல்லும் திறம் தரும் கலையிதை எளிமையாகக் கற்றுத் தேற ஏற்றதான இனிய காலம். கற்றிடுவீர் பெரு வாழ்வு பெற்றிடுவீர்.

தானும் நலம் கண்டு தாழ்ந்தார்க்கும் நலம் சொல்லி தேற்றுகின்ற தெய்வக் கலையிதை கற்றுத் தருவார் இதுகாறும் கை உயர்த்தி வந்ததில்லை. இனியோர் வாய்ப்பு இது போன்று வருமென்றும் உறுதியில்லை. நாவினிக்கும் தமிழினிலே நல்லதான கலையமுதை கற்றிடுவோர் எடுத்துண்ணும் கனியாகப் படைக்கின்றோம். கை தூக்கி வந்திடுவீர்—கற்று வாழ்வில் உயர்ந்திடுவீர். எளிதான பாடங்கள்—இனிதான விளக்கங்கள். எவ்வயது இனத்தாரும் ஏற்றிடும் வழி முறைகள். பாடத்துடன் நாட் குறிப்பு, சிறப்புக் கட்டுரை, மாணவர்களிடும் கேள்விகளுக்கு பதில் அனைத்தும் இலவச இணைப்பாகத் தருகின்றோம். மாணவர்கள்—தங்கள் ஜாதகங்களுக்கு பலன் எழுதிக் கேட்டுக் கொள்ள ஏற்ற ஏற்பாடுகள் செய்து தரப் படுகின்றன.

இப்போது மாணவர்கள் பி-1 பிரிவில் சேர்த்துக் கொள்ளப் படுகின்றனர். சேரும் முறை—செலுத்தும் கட்டணம் அறிந்திட 31-1-1985 தேதிக்குள் உங்கள் விலாசத்தைத் தெளிவாக எழுதி மனுச் செய்து கொள்ளுங்கள். (அயல் நாட்டவர்களும் விண்ணப்பித்துக் கொள்ளலாம்).

பிரபலஜோதிடர் ஜோதிட ஆசிரியர்
**ஸ்ரீமத் ஜெயவீரதேவா**
யோகி, ராஜயோகபயிற்சியாளர் ☏
பிளாட் நெ 204, கதவு எண்-5. 26312
அண்ணாநகர், மதுரை-625 020.



# தேன்கூடு

நிறைய நடிக, நடிகையர்கள் இருந்தும் குழப்பம் எதுவும் ஏற்படுத்தாமல் ஆரம்பித்து, நடந்து, முடியும் ஒரு படம் என்பதற்காக ஒரு ஷொட்டு!

அமைதியாகப் போன குடும்பத்தில் புயல் வீசி, சேதப்படுத்தி, கடைசியில் சீராவதை மையக் கருத்தாகக் கொண்ட இப்படத்தில்—

மே. சுந்தரராஜன் — கே. ஆர். விஜயா, அமரிக்கையான ஜோடி.

ராதாரவி காட்டிலாகா அதிகாரியாம். என்ன ஆர்ப்பாட்டம்? என்ன ஆர்ப்பாட்டம். வெகுநாள் கழித்து வீட்டுக்கு வந்து, மனைவியை எதிர்பார்த்து ஏங்கித் தவித்து, கடைசியில் அத்தனையும் பாழாகும் இடம்— ஜோர்.

சுமித்ரா தெய்வபக்தி மருமகள் என்றும், ராஜலக்ஷ்மி கோலப் பைத்திய மருமகள். இடையில் நாட்டிய ரசிகை மருமகள் ஒருவர் (பெயர் பொன்னியாம். முன்னேபின்னே பார்த்த ஞாபகம் — ஊஹூம்! இருந்தாலும் அந்த இதமான குடும்பப் பாங்கு. சப்பாத்தி கட்டவுடன் டெல்லிகணேஷ் சீறும் சிறலுக்கு முகம் கோணும் கட்டம். ஓ.கே., ஓ.கே. டபுள் ஓ.கே.) இந்த மூன்று மருமகள்களைத் திருப்திப்படுத்துகிற மாதிரி நாலாவது ஒரு இளைய மருமகள் வரவேண்டும் என்பதற்காக அறுபது நாகேஷும்; இருபது சுரேஷும் திட்டம் தீட்டி, அப்புறம் விஜியின் நாட்டிய வகுப்பு என்ன? ரங்கோலிக் கண் காட்சி என்ன? புருஷோர்ப்படி விரதம் என்ன? அமர்க்களம்தான்.

இளைய மருமகள் வந்த பிற்பாடு அல்லவா விஷயமே 'ராபணு' என்று வெளியே வருகிறது! அப்புறம் தனி அடுப்புதான், தனிச் சமையல்தான், வீட்டுக்குள்ளேயே டான்ஸ் தான், நீ பெரிசா, நான் பெரிசா சண்டை தான், பாகப்பிரிவினை தான். மூத்த அண்ணன் மேஜர் புழுங்கிப் போகிறார். டெல்லி கணேஷ் கூடவே உருகிப் போகிறார்.

நீசல்கண், கரிநாக்கு, நரம்பு மனிதர் நாகேஷ் — நீண்ட நாட்களுக்குப் பின் திரையில் பார்த்தாலும் அட்டகாசம். அந்தக் குடும்பத்தில் ஒட்டிக் கொண்டு, அந்தக் குடும்பத்தில் சாப்பிட்டு, நொள்ளை விட்டு, 'சண்டையே வராதா?' என்பதும், திருஷ்டி சுற்றுகிறேன் என்று பூசணிக்காயை வீட்டுக்கு அபேஸ் செய்து வருவதும் — ஹூஹும்! இப்படியே அடிக்கடி தலைகாட்டக் கூடாதா இவர் என்ற பெருமூச்சை ஏற்படுத்துகிறது.

'ஐயய்ய, இது இல்லையே, அது இல்லையே' என்று யாரும் சொல்லிவிடக் கூடாது என்பதற்காக முதலிலேயே ஒரு பேயட். ஒரு ஸ்டண்ட் ஸீன் என்று செருகி விட்டார்கள். ம். பரவாயில்லை. செருகப்படாமல் விட்டுப்போனது அனுராதா டான்ஸ். அதற்காகவே ஒரு ஆயிரங்கோடி நன்றிகள்.

பாடல்கள் ஒன்றும் ஓஹோ என்றில்லா விட்டாலும் காதில் பஞ்சை வைத்துக் கொள்ளச் செய்யாத அளவுக்கு இதமான ம்யூஸிக்.

குறிப்பிடப்பட வேண்டிய இரண்டு விஷயங்கள்: ஒன்று ஆரூர்தாஸ் வசனம். இரண்டு: நான் இருக்கிறேன் என்று காட்டிக் கொள்ளாத டைரக்டர் சத்யநாராயணன் (தெலுங்கு?).

'இது ஒரு கலகலப்பான குடும்பச் சித்திரம்' என்று யார் யாரோ போஸ்டர் ஒட்டிக் கொள்கிறார்களே! இவர்கள் வெகு தைரியமாக அப்படிச் செய்யலாம்.

# சிறை

## வெள்ளித்திரை

கதை தான் அஸ்திவாரம், பாத்திரப் படைப்புகள் தான் தூண்கள் என்றால் ''சிறை''யின் அஸ்திவாரத்தில் கலப்படம் இருக்கிறது. ஆயிரம் கால் மண்டபமோ என்கிற மாதிரி வேண்டாத தூண்கள் கட்டுப்படுகின்றன. இந்த உறுத்தல்கள், படம் நெடுக வருகின்றன. இதை மறக்க, ஒதுக்க முடியுமானால்...

லக்ஷ்மி, பண்டிகை நாள் மாக்கோலமாய் மனத்தில் பதிகிறார். குடுமி வைத்த பிரசன்னாவோடு சிணுங்குகிற சிணுங்கல்களில் ஒரு புதுப் பெண்டாட்டியின் நளினம் தெரிகிறது. விரற்கிடை அகலத்திற்கு அடர்த்திப் புருவங்களும், முகத்தில் பாதியை மறைக்கும் கொடூர மீசையுமாய் இருக்கும் ராஜேஷ் வலுக்கட்டாயமாய் அந்த ஏழைப் பெண்ணின் கையைப் பற்றிப் பலாத்காரத்தில் ஈடுபடுகிறபோது முதலில் கோபம், அதிர்ச்சி, அப்புறம் ஆற்றாமை, அழுகை, இன்னும் கடைசியில் கெஞ்சும் இறைஞ்சுதல் வார்த்தைகள் என்று உச்சத் திறமைகளைக் கொட்டுகிறார் லக்ஷ்மி.

லக்ஷ்மி. லக்ஷ்மி, லக்ஷ்மிதானா?

இல்லை, ராஜேஷும் ரேஸில் சமமாய் ஓடிவரும் குதிரை. எத்தனை மெல்லிய பாத்திரம் அவருக்கு? கயிறு மேல் நடக்கும் வேலை. பேச்சுக் குறைவு. குழல் துப்பாக்கியை எடுத்து அதன் வழியே தண்ணீர் மொண்டு வரும் குருக்கள் மனைவியைக் கண்ணால் குறிபார்த்துத் தொடரும்போது கண்களில் புதுக் கேள்வி. அவர் நிழல்பட்டு அவள் பதறி எழுந்து ''என்னை ஒண்ணும் பண்ணிடாத! போயிடு, போயிடு'' என்று கெஞ்சுவதைக் காதில் வாங்காமல் நெருங்கி அவள் கரத்தைப் பற்றிக் கண்ணாடி வளையல்களை நொறுக்கும் போது ஒரு விடாப்பிடித் தீர்மானம். குருக்களால் சுலபமாய் கைகழுவப்பட்ட நிலையில் போக்கற்றுப்போய் லக்ஷ்மி சுருட்டிக் கொண்டு படுத்திருப்பதைப் பார்க்கையில் மெலிதான அதிர்ச்சி, குற்ற உணர்வு. அவள் அந்த வீட்டு வாசலில் வந்து நின்று, ''என்ன பார்க்கறே, நான் இனிமே இங்க தான் தங்கப் போறேன்'' என்று உள்ளே நுழையும் போது ஏற்படும் குழப்பம். அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாய் மனம் திருந்தி அவளை அவனாக வீட்டில் ஏற்று, பொறுப்புக்களைக் கொடுத்து அவளுக்குச் செய்யும் மரியாதை. திடீரென்று கை,கால் இழுத்துக் கொண்டு விழுந்துபதறும் பதற்றம். ராஜேஷ் ஜமாய்த்திருக்கிறார்.

பாண்டியன், இளவரசி செருகல் இளமைக்காக என்றாலும் ஜொலிஜொலிக்காமல் போனது வருத்தமே. எஸ். எஸ். சந்திரன் வரும் காட்சிகளில் கொஞ்சம் டிராமாத்தனம் இருந்தாலும் கலகலப்பூட்டுகிறார்.

எம். எஸ். விஸ்வநாதன் — ஏன் இந்த சரிவு?

படத்தை ஒட்டுமொத்தமாகப் பாராட்ட முடியாவிட்டாலும் தனித்தனியே பல அம்சங்களைப் பாராட்டலாம். அதில் ஒரு அம்சம்: துணிச்சல்.

-ஜெயமன்மதன்





## நேர்மைக்கு நிகரில்லை!

1980—இல் எனக்கு மாநில அளவிலான விருது கிடைத்திருக்க வேண்டும். நேர்மையான முறையில் அதைப் பெற எண்ணிப் பிரார்த்தித்து வந்தேன். 1984 வரை கிடைக்கவில்லை. இவ்வாண்டு கல்வி உதவி இயக்குனர் எங்கள் பள்ளியைப் பார்வையிட்டு எனக்கு விருது அளிக்குமாறு பொரிசு செய்தார். அப்படியே நடந்தது!

**மெர்ஸி பாலசுந்தரம், மேற்கு சங்கரி**

## பக்தர்களைக் கைவிடான் பழனிஸ்வரன்

எங்கள் இரண்டாம் மகன் திடீரென்று காணமல் போய் விட்டான். வேதனையுடன் அந்த முருகக் கடவுளிடம் இழப்பைக் கூறி வேண்டினேன். இரண்டு மாதங்கள் கிருத்திகைக்குச் சென்னிமலை சென்று வந்தேன்.

விட்டன. 'தாயே இந்த வழியே திரும்பி வர வேண்டுமே...' என்று வேண்டிக்கொண்டேன். திரும்புகையில் அற்புதமாய்த் திடீரென்று காற்றும் மழைத் தூறலும் எங்கிருந்தோ வந்தன. என் பாதையைக் குளிர்வித்து. மனத்திலும் பரவசம் பொங்கச் செய்தன. ஆற்றைக் கடந்ததும் மழை நின்று விட்டது!

**திருமதி இந்திரா, சென்னை-28**

## தேடி வந்தது விஞ்ஞானம்

கல்லூரியில் நான் விரும்பிய விஞ்ஞானப் பிரிவு கிடைக்கவில்லை. பல கல்லூரிகளில் முயன்றுவிட்டு பஸ்ஸுக்காகக் காத்திருந்தேன். மனம் இறைவனை நாடியது. பஸ் ஏறியதும் பக்கத்து சீட்டில் வந்தமர்ந்தார் ஒரு பேராசிரியர். பேச்சுவாக்கில் என் மனக்குறை அறிந்து, அவருடனே அவர் பணியாற்றிய கல்லூரிக்கு அழைத்துச் சென்று



நான் விரும்பிய பிரிவில் இடம் வாங்கித் தந்து விட்டார்!

**கீதா ராகவன், சென்னை-5**



னால் காளையின் கொம்புகள் சிறுவனின் கக்கங்களுக்கடியில் அழகாகப் பொருந்தின. அவனைக் கொத்தி எடுத்து முதுகுப்புறமாகப் போட்டது. பையன் சிறு காயம் கூட இல்லாமல் தப்பினான்.

**ஏ. ஜே. சுஜாதா, திருச்சி-8**

## கிருஷ்ண லீலை

முதல் மூன்று குழந்தைகளைப் பெண்களாகப் பெற்றாள் என் அம்மா. பாட்டி கிருஷ்ண லீலா திரைப்படம் பார்த்துவிட்டு அதில் வரும் பால கிருஷ்ணன் போல் அம்மாவுக்குப் பின்னை பிறக்கணும் என்று வேண்டிக் கொண்டாள். நான்காவது குழந்தையும் பெண்ணாகவே பிறந்தது. 'படத்தில் கிருஷ்ணாக நடித்தது ஒரு பெண் குழந்தை தான்' என்பதைச் சித்தப்பா காட்டிக் காட்டியதும் தன் பிரார்த்தனை பலித்த விதத்தை எண்ணி வியந்து போனாள் பாட்டி.

**கே. சித்ரா, சென்னை-4**

மூன்றும் கிருத்திகைப் பிரார்த்தனையை முடித்துக் கொண்டு வீடு வந்த போது எங்கள் மகன் பத்திரமாக இருப்பதாகத் தெரிவித்துக் கடிதம் வந்திருந்தது. அதை எழுதியவர் பெயர் பழனீஸ்வரன்!

ஜயலட்சுமி, மல்லியகரை

## மணவாழ்வைக் காக்க மகன் பிறந்தான்

டிசம்பர் 16, என் கணவரின் முன்னாள் காதலி காலமான தினம். பழைய நினைவுகளி லிருந்து மீள முடியாமல் குழந்தை பிறந்தால் தான் என்னுடன் நிம்மதியாக வாழ முடியும் என்று கூறியிருந்தார் என் கணவர். நான் முருகனிடம் சரணடைந்தேன். வியப்பூட்டும் விதமாக அதே டிசம்பர் 16 அன்று எனக்குப் பிள்ளை பிறந்தான். முருகன் அருளை எண்ணி மெய்சிலிர்த்தேன்.

அ. மீனாட்சி, சென்னை-12

## அக்னி நட்சத்திரத்தில் நடந்த அற்புதம்

அக்னி நட்சத்திரத்தின் போது நண்பகல் 12 மணி அளவில் மதுரைக்கு அருகே உள்ள மடப்புரம் காளியைத் தரிசிக்கப் போய்க் கொண்டிருந்தேன். வறண்டு போன வைகை ஆற்றைக் கடக்கையில் மணலின் கொதிப்பில் என் வெற்றுக் கால்கள் கொப்பளித்து



## இயற்கை வென்றது

முதல் குழந்தை சிசேரியன் முறையில் பிறந்ததால் இரண்டாவது குழந்தையை நல்லபடியாகப் பிரசவிக்க வேண்டுமே என்று கவலையுடன் அம்மன் கோயிலில் வேண்டிக் கொண்டாள் என் தோழி. வலி எடுத்து அவளை ஆபரேஷன் தியேட்டருக்குள் அழைத்துச் சென்ற சற்றைக்கெல்லாம் மின் சாரம் துண்டிக்கப்பட்டது. பதினைந்து நிமிடங்களில் மீண்டும் மின்சாரம் திரும்புவதற்



குள் அவளுக்குச் சுகப் பிரசவம் ஆகிவிட்டது!

கிட்டம்மாள் சிவராமன், சென்னை-87

## பிள்ளையைக் காத்தார் பிள்ளையார்

ஜனநெருக்கமான கடைவீதி ஒன்றில்: இரவு நேரத்தில் நடந்தது அது. முரட்டுக் காளை ஒன்று எட்டு வயதுச் சிறுவனைக் கீழே தள்ளிக் கொம்பால் முட்டிக் குதறப் போயிற்று. உச்சிப் பிள்ளையாரை வேண்டிக் கொண்டேன். அந்த விக்னேஸ்வரன் அரு

## குழந்தை பிழைத்தது

டேபிள் ஃபானைத் துடைத்து, எண்ணெய் போட்டுவிட்டு, முன்புறக் கம்பியைத் திருப்பி மாட்டாமல் வைத்துவிட்டு முற்றத்தில் குளித்துக் கொண்டிருந்தேன். மின் இணைப்பு துண்டிக்கப்பட்டிருந்ததால் ஃபானை ஆஃப் செய்ய மறந்து போயிருந்தேன். திடீரென்று மின் இணைப்பு மீண்டும் வர ஃபானுக்கு அருகே படுத்திருந்த குழந்தை எழுந்து அதைத் தொடப் போய்விட்டாள். மனம் பதைபதைக்க பாடீசுவை வேண்டிக்கொண்டேன். குழந்தை ஃபானைத் தொடவும் மீண்டும் மின் இணைப்பு துண்டிக்கப்படவும் சரியாக இருந்தது!

ஆர். நாராயணசாமி, திருப்பாப்புலியூர்

## ராசியின்மையிலும் ஒரு ராசி

என்னைப் பெண் பார்க்க வந்த மாப்பிள்ளையை மனசுக்குப் பிடிக்கவில்லை. வீட்டாரோ என் விருப்பு வெறுப்புகளைப் பொருட்படுத்துவதாயில்லை. கடவுளிடம் என் கவலைகளைக் கொட்டினேன். பிறகு தெரிய வந்தது. என்னைப் பார்த்துவிட்டுப் போனவர் ஒரு விபத்தில் மயிரிழையில் உயிர் பிழைத்தாராம். எனக்கு ராசியில்லை என்று தீர்மானித்து அவர்களே கல்யாணத்துக்கு சம்ம



திக்கவில்லை. அந்தக் கடிதம் கண்டதும் நிம்மதிப் பெருமூச்செறிந்தேன்.
**தேவி, ஈரோடு-1**

## வேங்கையை வென்றார்

1947—இல் போலீஸ் இன்ஸ்பெக்டராய் இருந்த என் கணவர் ஊர் மக்களை அச்சுறுத்திய புலி ஒன்றை வேட்டையாட அருகே இருந்த காட்டுக்குள் சென்றார். அவர் சென்றது முதல் இடைவிடாமல் பிரார்த்தித்துக் கொண்டிருந்ததன் பயனாக, புலி அடித்துத் துப்பாக்கி கீழே விழுந்த போதும் வெறுங் கையால் சண்டை போட்டு விட்டு விழுப் புண்களுடன் திரும்பினார். மூன்றே மாதங் களில் உடல் நேராகி வேலைவரவும் ஆரம்பித் தார்.
**கமலா தியாகராஜன், சென்னை-28**

## யாமிருக்க பயமேன்?

சில நாட்களுக்கு முன்பு திருச்செங்கோடு மலைமேல் நடந்த கொலைச் சம்பவம் பற்றி அறியாத நாங்கள் தரிசனத்தை முடித்துக் கொண்டு இரவு 7.30 மணிக்கு மலைப் பாதையில் இறங்கிக் கொண்டிருந்தோம். முருகனை வேண்டிக் கொண்டே வருகையில் இருளில் இருந்து வெளிப்பட்ட இருவர் எங்களைத் தாக்க முயற்சி செய்தனர். அதே நிமிடம் வேறு இருவர் பூஜை சாமான் களுடன் பாதையில் மேல் நோக்கி வரவும் திருடர்கள் பயந்து ஓடிவிட்டனர்.
**ஷ்யாமளா ஹரிஹரன், கோவை-3**

## தேடி வந்த அழைப்பு

சென்ற ஜூலையில் இலங்கையில் கலவரம் நடந்த போது கொழும்பிலிருந்த நாங்கள் பாதுகாப்புக்காக ஒரு சிங்களர் வீட்டில் தஞ்சம் புகுந்தோம். ஆனால் அவர்கள் இர வோடு இரவாக இடத்தைக் காலி செய்யச் சொன்ன போது செய்வதறியாமல் தவித் தோம். எங்களுடன் இரண்டு சிறு குழந் தைகள் வேறு. கடவுளிடம் வழிகேட்டது வீண் போகவில்லை. என் சினேகிதி தானா கவே போன் செய்து எங்களை அவள் வீட் டிற்கு வரவழைத்து வைத்துக் கொண்டாள்.
**திருமதி க. யோகலக்ஷ்மி, சென்னை-10**

## மழலைப் பிரார்த்தனை

அஸ்ஸாம் கலவரம் நடந்த பகுதிகளில் பணியாற்றிக் கொண்டிருந்தார் இன்ஜினிய ரான என் கணவர். திடீர் வெள்ளத்தால் சேதமடைந்த ஒரு பாலத்தைப் பார்வையிடப் போன போது அவர் ஏறியிருந்த படகு கவிழ்ந்து விட்டது. வெள்ளத்தில் தத்த ளித்துக் கொண்டிருந்தவரை எங்கள் இரண் டரை வயது மகனின் அன்றுடப் பிரார்த் தனைதான் காத்தது. ''சாமீ, அப்பாஜியைக் காப்பாத்து'' என்ற மழலைக் குரல் அந்த ஆண்டவன் செவிகளில் விழுந்திருக்க வேண் டும். கட்டுமானப் பணிக்கான சாமான் களைப் பத்திரப்படுத்த அவற்றுடன் பிணைக்கப் பட்டுக் கரையில் கட்டியிருந்த கம்பியைப் பிடித்துக் கொண்டு மெல்லத் தப்பினார்.
**லட்சுமி சுப்பிரமணியம், திருநெல்வேலி**

## அதிர்ச்சி வைத்தியம்

ஈரோடில் வேலையிலிருந்த போது நாத்தி கனாய் இருந்தேன். வரவேண்டிய வேலை மாற்றம் பல நாட்களாகக் கிடைக்காம லிருக்க வெறுத்துப் போயிருந்தேன். மனைவி யின் அன்புத் தொல்லை தாங்காமல் அவளுடன் சேலம் காமாட்சியம்மனைத் தரி சித்து வந்தேன். ''அம்மன் அருள் இருந் தால் மாற்றம் கிடைக்கும்'' என்றவளிடம் ''அம்மன் அருள் வேண்டாம். அதற்கு இயக்குனர் அருள்தான் தேவை'' என்று இடக்காகப் பேசிய எனக்கு அலுவலகம் சென்ற போது பேரதிர்ச்சி. மாற்றல் ஆணை காத்துக் கொண்டிருந்தது!
**பி. என். ராதாகிருஷ்ணன், சேலம்-1**

## ஏகவிடம் கேளுங்கள்

55—ஆவது வயதில் விபத்தில் அடிபட்டு இடுப்பு எலும்பு முறிந்து விட்டது. ஸ்க்ரு ஆணி வைத்து முறிந்த எலும்பைச் சேர்த் தனர். ஊன்றுகோல் இல்லாமல் நடக்க முடி யாது என்கிற நிலை. சக்கர நாற்காலியைச் சொரிக செய்தார்கள் என் நண்பர்கள். வேண்டாதவர்கள் 'நொண்டி' என்று குறிப் பிட ஆரம்பித்தார்கள். மனமுடைந்து ஆண்டவனை வேண்டினேன். ஜெப ஆலயங் களிலும் எனக்காக ஜெபம் நடந்தது. நாற்பது நாட்கள் கழித்து எக்ஸ்ரேயைப் பார்த்து வியந்து கேட்டார் டாக்டர்: ''இந்த வயதில் எப்படி எலும்புகள் சேர்ந்தன?'', ''ஏகவிடம் கேளுங்கள்!'' என்றேன்.
**ஏ. ஞானமுத்து குருசாமி, மதுரை-10**

## அம்பிகை திரும்பி வந்தாள்

எங்கள் வீட்டிலுள்ள லலிதா திரிபுரசுந்தரி படத்துக்கு ஒவ்வொரு வெள்ளியும் விசேஷ பூஜை செய்வேன். புக்ககத்தார் அப்படம் மிக உக்கிரமாக உள்ளதால் பூஜை செய்ய வேண்டாம் என்றனர். கணவரும் அதை எடுத்துப் பரண் மேல் கட்டி வைத்துவிட் டார். கர்ப்பமாக இருந்த நான் கலங்கிப் போனேன். அந்த அம்பிகையிடம் அடுத்த வெள்ளிக்கிழமைக்கு முன் என்னிடம் திரும்பி வருமாறு வேண்டிக் கொண்டேன். வியாழன் மாலை என் கணவரே தன் காரியங்களுக்கெல் லாம் தடங்கல் ஏற்படக் காரணம் இப் படத்தை எடுத்து வைத்தது தான் என்று தோன்றி, போய்த் தானே அதை மீண்டும் எடுத்துப் பூஜை அறையில் மாட்டி விட்டார்.
**எஸ். லலிதா, சென்னை-42**

---

**ராகமாலிகா வழங்கும் பட்டுப்புடைவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:**

**திருமதி ஜெயலட்சுமி ராஜமாணிக்கம்**
மல்லியகரை அஞ்சல்,
ஆத்தூர் வட்டம்,
சேலம் மாவட்டம்.

---

# தேநீரும் விருந்தோம்பலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்

உங்கள் இல்லத்திற்கு வருகை தரும் நண்பருக்கு முதலில் வழங்குவது எது? நல்வரவு என்று சொல்லும் புன்னகையும் நல்லதொரு கோப்பை தேநீரும் தானே! அது வழி வழியாய் வரும் உங்களுடைய கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில் காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள் இருந்தால்? உடன் புதிய பால் கிட்டாத நிலையாளுலோ?

ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள் பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண உதவுகிறது. சிக்கனமாக, விரைவாக, எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்குகளுக்கும் இது ஈடு இணையற்றது..

# ஸாகர்

## ஸ்கிம் மில்க் பவுடர்

கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான குணங்கள் உண்டே இதில்.






விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத்.

ASP/SMP/5/84

ராத்திரி முழுக்கப் படுக்கையில் படுத்து விழித்திருந்தான் பாலா. குழந்தை கையில் பொம்மையைக் கொடுத்துக் கொடுத்துப் பிடுங்குவது போல இது என்ன ஒரு துக்க விளையாட்டு என்று எண்ணிக் கொண்டான். தூக்கத்தில் ராதா ஏதோ பிதற்றினாள். அப்பா சுருதி மாறாமல் குறட்டை விட்டார்.

கொஞ்ச நேரத்தில் விடிந்த போது பாலாவுக்கு ஆஃபீஸுக்குச் செல்கிற எண்ணம் இல்லை. நேரே மருத்துவமனைக்குப் போய் அந்த டாக்டரைப் பார்த்துப் பேச வேண்டும் என்ற எண்ணம் தான் பிரதானமாய் இருந்தது.

அது ஒரு நம்பிக்கை விளக்கு. இன்னும் அணைந்து விடாமல் கொஞ்ச கொஞ்சம் சையில் உயிரைப் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிற விஷயம்.

கண்களில் எரிச்சல் இருந்தாலும் இந்தக் கடைசி நிமிட எண்ணத்தில் சுறுசுறுப்பாய் எழுந்து காலைச் சமையலைக் கவனிக்க ஆரம்பித்தான். அவன் எழுந்தவுடன் "இன்னிக்கு வெள்ளிக்கிழமை பாலா" என்றார், அப்பா.

"அதனால என்னப்பா?" என்று கேட்டான். அப்பாவிடம் இன்னும் நேற்றைய விஷயம் பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லை.

"இன்னிக்குப் பிரேமா திருச்சிக்குப்போவு தில்ல, மாப்பிள்ளை ஃப்ரெண்ட் கல்யாணத்தை அட்டெண்ட் பண்ணனும்னு..."

"அட ஆமா" என்றான்.

"இன்னிக்கு ஆஃபீஸுக்கு லீவு போட்டுடு. அது என்னவோ பர்சேஸ்லாம் பண்ணனும்னு சொல்லிட்டிருந்தது. அப்புறம் லாக்கர்ல இருக்கற நகையை எடுத்துத் தரச் சொல்லியிருக்குது... நீ ராத்திரி ஸ்டேஷனுக்கு வேற போக வேண்டியதிருக்கும்."

"எல்லாம் அப்புறம்... நான் சமையலை முடிச்சிட்டு அவசரமா ஒருத்தரைப் பார்க்கப் போறேன்... அவரைப் பார்த்துட்டு வந்ததும் மத்த வேலெல்லாம்" என்றான், பாலா.

"சரி" என்றார் அப்பா.

ஆஸ்பத்திரி வாசலில் ஆட்டோ வந்து நின்றது.

பாலா இறங்கினான். தலையைக் கையால் சீர்ப்படுத்திக் கொண்டான். சக்கர நாற்காலி ஒன்று படிகளுக்கு அருகே சரிவில் ஏற்றப்பட்டுக் கொண்டிருந்தது. அவசரமாய் அந்த நர்ஸை எட்டிப் பிடித்தான்.

"சிஸ்டர். டாக்டர் கணேசனைப் பார்க்கணும் . எங்க இருப்பாரு?"

"எந்த கணேசன்?" டக், டக் என்று நடந்து கொண்டே கேட்டாள் அவள்.




"மாம்பலத்தில் பாலி கிளினிக் கூட ஒண்ணு வச்சிருக்காரு..." என்றான்.

வராந்தா வலது புறம் திரும்பியது. அவர்களும் திரும்பினார்கள். அங்கங்கே குப்பென்று மருந்து வாசம் வீசியது.

"இங்க நாலஞ்சி கணேசன் இருக்காங்க.. நீங்க சொல்ற மாதிரி மாம்பலத்தில பாலிகிளினிக் வெச்சிருக்கிறவரு நியூராலஜியில இருக்காரு... அங்க வேணும்னு போய்க் கேட்டுப் பாருங்க... இரண்டாவது மாடி லெஃப்ட் விங்..." அடுத்த வார்த்தை பேசக் கூட அவகாசமில்லாமல் நர்ஸ் சட்டென்று இடதில் திரும்பினாள். இவன் இரண்டாவது மாடிக்கு வழி தேடிப் போனான்.

படி முடிவில் அம்புக்குறிகள் கலபமாய் நியூராலஜி பகுதிக்கு அழைத்துச் சென்றன.

'ஆர். கணேசன்' என்று போர்டு கொக்கியில் தொங்கிற்று. நுழைந்தான்.

சின்ன அறை. ஒரு பிளைவுட் தடுப்பிற்கு அந்தப்பக்கம் சாப்பிடும் மேஜை. வாஷ்பேஸின். மேலே புராதன விசிறியின் நீளநீளமான இறக்கைகளின் நிதானமான சர்ரக், சர்ரக். இடுப்புயர மேஜையின் மேல் தூசி மட்டும். நாற்காலியில் வெள்ளை கோட் முதுகு மாறி மாட்டியிருந்தது.

ஆள் யாரும் இல்லை.

தயங்கி விட்டு வெளியே வர எத்தனிக்கையில் வாசலில் நிழலாடிற்று.

"யெஸ்" என்றது குரல்.

ஆறடி உயரத்தில் அவன் நின்றிருந்தான். முழுக்கைச் சட்டை. 'இன்' செய்திருந்தான். அகலமான, சற்றே கறுப்பான முகம். புருவங்கள் நடுவில் சந்தித்தன. கண்ணாடிபோட்டிருந்தான். திடமான உதடுகளுக்கு மேலே அடர்த்தி மீசை.

"டாக்டர் கணேசன்?" என்று இழுத்தான் பாலா.

"யெஸ் நான்தான்."

"குட்மார்னிங் டாக்டர்... நான் பாலா.. நீங்க இப்ப ஃப்ரீயா?" என்று சடசடவெனக் கேட்டான்.

"என்ன விஷயம் பாலா?"

"பர்ஸனல் மேட்டர்... உக்காந்து பேசலாமா?"

அவன் கண்களில் ஆச்சரியமும் புரிபடாத சந்தேகமும் தோன்ற "பர்ஸனலா?" என்று அழுத்திக் கேட்டான்.

"ஒங்களுக்கு வீட்ல கல்யாணம் பாத்திட்டிருக்காங்க இல்லியா?"

"ஆமா..." அவன் கண்களில் ஆர்வம் காட்டினான்.

"அதில் அனுசூயான்னு ஒரு ஜாதகம் வந்தது ஞாபகமிருக்கா?"

"ஜாதகமா... எனக்கு இந்த ஜாதகம் பிளினஸ்லாம் நம்பிக்கை கெடையாது பாலா... என் கல்யாணத்துக்கு ஜாதகம்

பாக்கறதில்ல... பட் அனுசுயான்னு ஒரு பொண்ணோட போட்டோவைத் தரகர் கொண்டு வந்து காமிச்சார்... வாட் அபௌட் தட்?''

''அந்தப் பொண்ணு புடிச்சிருக்குதுன்னு நீங்க கல்யாணத்துக்கு ஒத்துக்கிட்டீங்களா டாக்டர்?''

''ஓக்... நீங்க யாரு... அந்த அனுசுயா வுக்கு பிரதரா, கஸினு, எப்படி உறவு? எதுவுமே தெரியாம ஒரு பொண்ணைப்பத்தி உங்ககிட்ட நான் எதுவும் டிஸ்கஸ் பண்ணத் தயாராய் இல்ல...''

''அனுசுயாவை நான் மனப்பூர்வமா விரும்பறேன் டாக்டர்... அவளும் என்னை விரும்பறா... எங்க ரெண்டு பேருக்கும் கல்யாணம் நடக்கிறதா இருந்து. அதுக்கு இன்விடேஷன்லாம் கூட அடிச்சாச்சி. இதைப் பாருங்க...''

பையில் வைத்திருந்த அழைப்பிதழை எடுத்து நீட்டினான் பாலா. அவன் மௌன மாய் வாங்கி அதில் கண்களை ஓட்டினான்.

''அடடா.. தரகர் சொல்லலியே... கல் யாணம் நிச்சயமாய்டிச்சா?''

''நிச்சயமாய்டிச்சி... வேண்டான்னு சொன்னதால எல்லாம் நின்னு போச்சி.''

கணேசன் நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்து கொண்டான். ''யெஸ்'' என்றான்.

பாலா சொன்னான். அனுசுயாவிற்கும் அவனுக்குமிருந்த நட்பு எப்படி மெல்ல

சுபா

மெல்ல இனம் மாறிக் காதல் என்ற அமுத்தத்தைப் பூசிக் கொண்டது என்று சொன்னான். எப்படி ஜாதகமும் இருதயக் கோளாறும் அவன் கல்யாணத்தை இடர் செய்து கொண்டே வந்தன என்று சொன்னான். ஒரு சமாதானமாய் அனுசூயாவைப் பாலா மணக்க எப்படி இரு வீட்டாரும் சம்மதிக்க வைக்கப்பட்டார்கள் என்று சொன்னான். எல்லாம் கோக்கப்பட்ட நேரத்தில் எப்படிக் கணேசனின் இந்தத் திடீர்ப் பிரவேசம் அத்தனையையும் குலைத்துப் போட்டுவிட்டிருக்கிறது என்று சொன்னான்.

''க்ரேஸி பீப்பிள்!'' என்றான் கணேசன் முகத்தில் இகழ்ச்சியைக் காட்டி. ''வயசாக, ஆக புத்தி கழண்டு போய்டும் போல இருக்கு... எத்தனை கொழப்பம் பண்ணியிருக்காங்க... ச்சே... அந்த பொண்ணு மனசு எப்படி வேதனைப்படும். நீங்க எப்படி இத்தனைக்கும் பொறுமையாக இருந்தீங்க பாலா...? அட போய்யான்னு ஒருவார்த்தை சொல்லிட்டு அவளை இழுத்துக்கிட்டுப்போய் கோயில்ல வச்சி தாலி கட்டியிருக்க வேண்டியதுதானே...''

''அனு ஒத்துக்கலையே டாக்டர்... எப்பப் பாரு அவங்க மனுஷங்க... அவங்க வீடு... அதோட தங்கைங்கன்னு பயந்து பயந்து இல்ல அவங்க இழுத்த இழுப்புக்கெல்லாம் போச்சி. இப்ப உங்களைக் கொண்டு வந்து மணைல உக்காத்தி வச்சாலும் அது பேசாம தான் கழுத்தை நீட்டும்...''

''அதான் இந்தத் தேசம் உருப்படல இல்ல...'' என்றான் கணேசன்.

''தனக்காக வாழணும்னு தோணற இல்ல... மத்தவனுக்காகவாவது விட்டுக் குடுத்து. விட்டுக் குடுத்துச் சீரழிஞ்சி போய்டறாங்க... கொஞ்சம் சுயநலவாதியா இருக்கறவன் அதைத் தனக்குச் சாதகமா எடுத்துக்கறான்... வெல்... இப்ப நான் என்ன செய்யணும்னு சொல்லுங்க பாலா.''

''அனுவை எனக்காக விட்டுக் கொடுக்கணும் டாக்டர்...''

''நீங்க போய் ஆகவேண்டியதைப் பாருங்க... நான் வீட்ல சொல்லிடறேன். அனுசூயா எனக்கு வேண்டாம்னு...''

''தாங்க்யூ... டாக்டர்.. தாங்க்யூ வெரி மச்...''

**பா**லா ஆஸ்பத்திரியை விட்டு வெளியே வருகையில் மனதும் மிக்க மெலிதாகிப்போன மாதிரி உணர்ந்தான். பெரிய இக்கட்டாய் எண்ணியிருந்தது ஒரு சுலபமான வீச்சில் விலகிக் கொண்டதை எண்ணிச் சந்தோஷித்தான்.

ஆஃபீஸில் இவனைப் பார்த்ததுமே மானேஜர், ''ஒங்கப்பா போன் பண்ணி லீவுக்குச் சொல்லிட்டாரே'' என்றார்.

''லீவுலதான் இருக்கேன். ஆனா சஸ்டமரா வந்திருக்கேன். லாக்கர் ஆபரேட் பண்ணணும்...'' என்றான். அப்போது தான் உள்ளே நுழைந்த அச்சுதனிடம் ''ஏடா... அச்சுதா வரு, வரு...'' என்றான். ''எல்லாருக்கும் கேக்கும் டீயும் சப்ளை பண்ணு...'' என்றான்.

''என்ன விஷயம்... ரொம்ப நல்ல மூட்ல இருக்காப் போல இருக்கு...?''

''என் கல்யாணம் நடந்துடும் சார்..' அந்த டாக்டர் கணேசன் எம்.பி.பி.எஸ். எம்.எஸ். இஸ் எ ஜெம் ஆஃப் எ மேன்... உடனே புரிஞ்சிக்கிட்டு விலகிக்கறேன்னு சொல்லிட்டார்...''

''அதுக்கு ஒன்றரையணா கேக்கும், டீயுமா?'' என்றார் மானேஜர் கண்களை அகட்டிக் கொண்டு.

''அதானே...'' என்றார்கள் கோபாலன், நடராஜன், துரைசாமி.

''இது வெறும் டோக்கன். பின்னால கிராண்டா பார்ட்டி... நான் இப்ப அவசரத்திலே இருக்கேன்...'' சொல்லிக் கொண்டே லாக்கர் அறைக்கு ஓடினான். உள்ளேயிருந்து நகைகளை எடுத்துக்கொண்டு திரும்பி வருகையில் டீயும் கேக்கும் விநியோகமாகிக் கொண்டிருந்தது.

''பாலா மறந்துட்டேன் பார்த்தியா... ஒன் ஆள் ஃபோன் பண்ணுப்பா...''

''என்ன விஷயம்னு சொல்லிச்சா சார்?'' என்றான் ஆவலுடன்.

''எங்கிட்ட சொல்லுமாப்பா. இல்லே நான் அவர்கிட்டயே பேசிக்கறேன்னு சொல்லிட்டுப் ஃபோனை வெச்சிட்டா.. அதான் நேர்ல பார்த்துப் பேசப்போறியே... ஜமாய்... நெறையப் பேசு... ஆனா பேசிக்கிட்டே மாத்திரம் இருந்துடாதே...'' என்றார்.

''நாளைக்கு... இன்னிக்கில்ல..'' என்றான்.

**வீ**ரராகவன் ஃப்ரிட்ஜைத் திறந்து ஒரு பாட்டில் நிறையத் தண்ணீரை அப்படியே வாயில் வைத்துக் குடித்தார். மூச்சு வாங்கிவிட்டு மறுபடியும் அனுசூயாவைப் பார்த்தார்.

அனுசூயா குத்துக்காலிட்டு உட்கார்ந்திருந்தாள். நேற்றைய சாயங்காலம் தொடங்கிய விஷயம் அது. பாலா வந்து அவன் ஏறக்குறைய நடைப்பிணமாக வெளியேறிய பின்னால் அந்த இடத்தில் அப்படியே சரிந்து உட்கார்ந்தவள்தான்.

வீரராகவன் மறுபடி மகளைப் பார்த்தார். ஒரு ஓரத்தில் பாசம் குத்திற்று. கூடவே இவளுக்கு என்ன இவ்வளவு ஆங்காரம் என்ற எண்ணமும் ஏற்பட்டது.

''எல்லாம் சரியாப் போச்சி அனுசூயா... நேத்து சாயங்காலத்தோட நம்ம நல்ல நேரம் ஆரம்பிச்சிடுச்சிம்மா... இனிமே அந்தப் பையன் இந்தப் பக்கம் தலைவெச்சிக் கூடப் படுக்க மாட்டான்'' அனுசூயா பதில் சொல்லவில்லை.

வீரராகவன் உள்ளறையிலிருந்து வெளியே வந்தார். தையல் மிஷினைச் சுற்றிக்கொண்டிருந்த கதம்பாவிடம் போனார்.

''கதம்பா.''

''என்னப்பா?'' கதம்பா சட்டென்று உள்ளங்கையால் சக்கரத்தை நிறுத்திவிட்டு அவரை ஏறிட்டுப் பார்த்தாள்.

''அனுசூயாவை அப்படி காத்தாட எங்கயாவது கூட்டிக்கிட்டுப் போய்ட்டு வாயேன். அது சும்மாவது மனசைப் போட்டுக் கொழப்பிக்குது...''

''சரிப்பா'' என்று எழுந்து கொண்டாள் கதம்பா.

''வாம்மா... கண்ணம்மாவ்ல...?''

கதம்பா மூன்றாவது முறையாகக் கெஞ்சினாள்.

''ஒங்கூட நெறையப் பேசணும் அனுசூயா.. அது இங்க வேணாம்...கௌம்பு...''

அனுசூயா நம்பிக்கையில்லாதவள் மாதிரி கதம்பாவை ஏறிட்டுப் பார்த்தாள். கதம்பாவின் கண்களில் இருந்த இறைஞ்சுதல் அவளை மெல்ல அசைந்து கொடுக்கச் சொல்லிற்று. சமையலறைக் குழாயிலேயே தண்ணீரை உள்ளங்கையில் வாங்கிக்கொண்டு சில்லென்று அறைந்து கொண்டாள்.

**ப**ஸ் ஏறி நேராய்க் காந்தி சிலை பீச்சுக்கு வந்தார்கள். விளக்கொளி சூழ்ந்த மணல் பரப்பில் வந்து உட்கார்ந்தார்கள். வழிநெடுக அனுசூயா உம்மென்று இருந்தாள்.

''மாங்கா பத்தைன்னு ஒனக்கு ரொம்பப் புடிக்குமே அனுசூயா... வாங்கலாமா?''

''ம்'' என்று முனகிய அனுசூயா திடீரென்று பொங்கிப் பொங்கி அழ ஆரம்பித்தாள்.

''அட ஏன் அனுசூயா...? அழாதே... நீ அழறதப் பார்த்தா எனக்கும் அழுகை வருதும்மா.''

''எத்தினி தடவை இந்த பீச்சுல பாலா கையால நான் மாங்கா வாங்கித் தின்னிருக்கேன் தெரியுமா கதம்பா?''

கதம்பா எதுவும் பேசாமல் எழுந்து சென்று மாங்காய்க் கீறுகளை வாங்கிக் கொண்டு வந்தாள். மிளகாய்ப் பொடியை ஒற்றி, அனுசூயாவிடம் நீட்டினாள்.

அனுசூயா ஒவ்வொரு பல்வாய்த் துண்டித்துச் சாப்பிட ஆரம்பித்தாள்.

''நெஜம்மாவே நீ பாலாவை லவ் பண்றியா அனு?''

அனுசூயா லேசான திடுக்கிடலோடு கதம்பாவை நிமிர்ந்து பார்த்தாள்.

''என்ன கேக்கறே கதம்பா?''

''ப்ளெய்னாக் கேக்கறேன்... எனக்கு இந்த லவ்வுல எல்லாம் நம்பிக்கையே கெடையாது அனுசூயா. லவ்வுங்கறதே செக்ஸ்னாலத்தான் வருதுன்னு நான் நெனைக்கறவ. பாரேன்.. நாலு நாள் சேந்தா மாதிரி பஸ்ல பாத்துக்கிட்டு வருவான். என்னு இந்தப் பைத்தியம் இப்படி மொறைச்சிக்கிட்டே வருதேன்னு எளக்காரமா ஒரு சிரிப்புச் சிரிச்சிக்க. அடுத்த நாள் லெட்டர் எழுதி நீட்டுவான்... அறை வுடு. அதையும் வாங்கிக்கிட்டு இன்னொரு பஸ்ல ஏறி இன்னொரு பொண்ணை மொறைக்க ஆரம்பிப்பான். பொண்ணுங்க எல்லாம் ஒண்ணுமே தெரியாதவங்கன்னு நான் சொல்லவரலே... நூத்தெட்டு புஸ்தகம், ஆயிரத்தெட்டு சினிமாப் பார்த்துட்டு ஸ்கூல் படிப்பு முடியறதுக்குள்ள கொஞ்சம் பொட்டைத்தனமா ஒரு பையன் கெடைச்சாப் போதும். அட்ராக்ஷன்தான். அவன் ஆம்பிளை. இவ பொம்பிளை. அதினால ஒரு அட்ராக்ஷன். அதோட சரி. இதுவா காதல்? நீ கூடக் கொஞ்சம் அவசரப்பட்டுட்டியோன்னு தோணிச்சி. அதான் நீ நெஜமாவே லவ் பண்றியான்னு கேட்டேன்.''

''நான் எப்படிக் கதம்பா இதுக்குப் பதில் சொல்வேன்... நம்ப அம்மா, அப்பா வீட்ல எத்தினி ஜாதகம் பொரட்டுனாங்க. எத்தினி ஜோசியக்காரனைப் பார்த்தாங்க. எத்தினி கோயிலுக்கு வேண்டிக்கிட்டாங்க. எனக்குக் கல்யாணமாவலையேன்னு எம்மேலேயே கோவம். வீட்ல எங்கூட பேசக் கொள்ள ஆளில்லே. நீ ஆஃபீஸ் போற, வரே... ஆஃபீஸ்ல நடந்ததை ரெண்டொரு வார்த்தை சொல்றே... சாப்டுட்டு, பொஸ்தகம் படிச்சிட்டு, டீ.வி. பார்த்துட்டு, தூங்கிடறே. கஸ்தூரி சின்னப் பொண்ணு. அதுக்குஅதும் படிப்பு முக்கியம். வீட்ல என்னை எப்படி வச்சிருந்தீங்க? ஒரு ரெண்டொரு வார்த்தை சிரிச்சிப் பேசினீங்களா? அதினால எங்கூட யாராவது அந்த மாதிரி பேச மாட்டாங்களா? பழக மாட்டாங்களான்னு இருந்தது. பிரேமா நல்ல மாதிரி. அதுகூட பழக்கம் இருந்ததால அவுங்க வீட்டுக்குப் போவ ஆரம்பிச்சேன். அப்பத்தான் பாலா கூடப் பழக ஆரம்பிச்சேன். மெதுவா பேச்சு அன்பு, லவ்வுனு கத்தி வந்துது. அதெல்லாம் சும்மான்னு நான் கூடத்தான் சொன்னேன். வாய்தான் அந்த மாதிரி சொல்லியிருந்தது. மனசுக்கு அப்படி இல்லன்னு தெரிஞ்சிப்போய்டிச்சி... பழக்கம் ஜாஸ்தியானப்புறம்எங்களை அறியாமலே நாங்க ஒருத்தரை ஒருத்தர் 'லவ்' பண்ண ஆரம்பிச்சோம். நெஜமானுமே அது லவ்வுதான் கதம்பா. நெஜமானுமே அது லவ்வுதான்.''

அனுசூயாவிற்கு மூச்சிரைத்தது.

(தொடரும்)

இவருக்கு சினிமாவே தெரியாது!



''நான் கிராமத்தில் பிறந்தவன். மின்சார விளக்கைக் கூட அதிசயமாய்ப் பார்த்த காலம். நாலு வயது எனக்கு. ஒரு தடவை பம்பாயிலுள்ள சொந்தக்காரர் வீட்டுக்குப் போனேன். என்னை 'சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போகிறேன்' என்றார்கள். தியேட்டரில் மேலே பார்த்தேன். ஏதோ ஒன்று வேகமாய்ச் சுற்றிக் கொண்டிருந்தது. அது ஃபேன் என்று அப்போது தெரியாது. கூட வந்திருந்தவர்கள் 'என்ன பார்க்கிறாய்?' என்று கேட்க நான், ''சினிமா'' என்றதும் கொல்லெனச் சிரித்து விட்டனர். எனக்கு வெட்கமாகப் போய் அழ ஆரம்பித்து விட்டேன்!''

ஒரு கூட்டத்தில் சாருஹாசன் பேசியது.

—மௌனஸ்மி.

# விறகும் விருட்சமும்

## மன்னார்குடி விசுவநாதன்

## ஜி. கே. மூர்த்தி

ஆனந்தன் களைப்புடன் வீட்டினுள் வந்து நுழைந்தான்.

''அப்பா... நாளைக்கு மன்த்லி டெஸ்ட். பரீட்சைக்கு பேப்பர் வாங்கணும். எட்டணா காசு தா..''

' அப்பா... எங்க வகுப்பிலே எல்லாரும் எக்ஸ்கர்ஷன் போறாங்க...கலைக்கு அஞ்சு ரூபா வாங்கிட்டு வரச் சொன்னாங்க...''

வேணியும் ரம்யாவும் ஆளுக்கொரு பக்கமாக அவனை நச்சரித்தார்கள்.

''சை... உங்களுக்கும் வேறே வேலை இல்லே... உங்க டீச்சருக்கும் வேலை இல்லே. உங்களைச் சொல்லிக் குற்றம் இல்லே. உங்களைப் படிக்க வைக்கணும்னு என்னைத் தொந்தரவு பண்ணினாளே, உங்க அம்மா.. அவளைச் சொல்லணும்...'' என்று அலுத்துக் கொண்டே போய்ச் சாய்வு நாற்காலியில் சாய்ந்தான் ஆனந்தன்.

முற்றத்துக் குறட்டில் நிலவின் வெளிச்சத்தில் உட்கார்ந்து அமைதியாகப் படித்துக் கொண்டிருந்தார்கள், பாபுவும், சேகரும்.

பாபு ஐந்தாம் வகுப்பிலும், சேகர் ஏழாம் வகுப்பிலும் படித்து வந்தார்கள்.

வேணியும், ரம்யாவும் மூத்தவர்கள். வேணி எட்டாம் வகுப்பிலும், ரம்யா ஒன்பதாம் வகுப்பிலும் படித்து வந்தார்கள்.

மின்சார வாரியத்தில் லைன்மேனாகப் பணியாற்றும் உத்தியோகம் ஆனந்தனுக்கு. குடியிருக்க ஒரு வீட்டை மட்டும் பிதுரார்ஜிதச் சொத்தாக ஆனந்தனுக்கு வைத்துவிட்டுக் கண்ணை மூடினார் அவன் அப்பா.

ஆயிற்று.

ஆனந்தனுக்கும் வயது நாற்பத்தைந்து ஆகிவிட்டது.

சாதாரணக் கூலியாகச் சேர்ந்து, ஏதோ இன்று லைன்மேனாக உயர்ந்திருக்கிறான்.

ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால், பாரிச வாய்வு என்று படுக்கையில் வீழ்ந்த அவன் மனைவி பார்வதி, நோயின் கடுமை தாங்காமல் ஒருநாள் உயிரையே விட்டுவிட்டாள்.

நான்கு குழந்தைகளை வைத்துக்கொண்டு கண்ணீர் வடித்தான் ஆனந்தன்.

அதுவரையில் பட்டும் படாமலும் வந்து போய்க் கொண்டிருந்த ஆனந்தனின் மாமியார் லெட்சுமி, பேரப்பிள்ளையின் மேல் உள்ள பாசத்தினாலும், தன் மருமகன் வேறு கல்யாணம் செய்து கொண்டால் என்ன செய்வது என்ற ஆதங்கத்தினாலும் சமைத்துப் போடும் வேலையை வலிய வந்து ஏற்றுக் கொண்டாள்..

ஆண்டுகள் ஐந்து ஓடிவிட்டன.

ஆண் பிள்ளைகள் பாபுவின் மேலும், சேகரின் மேலும் அளவு கடந்த பிரியம் வைத்திருந்தான் ஆனந்தன். டென்சன் மேல் அவனுக்கு அவ்வளவு ஈடுபாடு இருந்ததில்லை.

''என்ன இருந்தாலும் டென்சன் இன்னொருத்தன் வீட்டுக்குப் போகப் போறவள்தானே... நான், மின்சாரக் கம்பங்களில் உள்ள கம்பிகளில் உரசும் மரங்களின் கிளைகளை வெட்டி வீழ்த்துவேன். மரங்களிலிருந்து வெட்டி வீழ்த்திவிட்ட பிறகு அவைகளைக் காய வைத்து விறகாகத்தானே பயன்படுத்த வேண்டும்... டென்சன் அப்படித்தான். விருட்சத்தில் வளர்ந்தாலும் வெட்டப்பட்டு புருஷன் வீட்டுக்குப்போய் விறகாக வேண்டியதுதான்...'' —என்றெல்லாம் தன் மனைவியிடம் வாதம் செய்வான் ஆனந்தன்.



பதில் எதுவும் சொல்லாமல் — லெட்சுமி கரமான தன் முகத்தில் களங்கமில்லாத புன்னகையை நெளியவிட்டவாறே அப்பால் போய் விடுவாள் அவன் மனைவி பார்வதி.

ஐந்தாம் வகுப்பு முடிந்தவுடன் பெரிய பெண் ரம்யாவைத் தன் மனைவிக்கு ஒத்தாசையாக வீட்டு வேலைகளுக்கு வைத்துக் கொள்ள முடிவு செய்தான் ஆனந்தன்.

''வேண்டாங்க. என்னோட வேலைகளை நானே செய்துக்கறேன். அவளைக் கொஞ்சம் படிக்க வையுங்க. வேறே சொத்து சுகம் இல்லாத நாம், கல்விங்கற சொத்தையாவது அவர்களுக்குக் கொடுப்போமே...'' என்றாள் பார்வதி.

''விளுக அவர்களுக்குச் செலவு பண்ணச் சொல்றே! மரமாக இருந்து என்றைக்கும் நிழல் தரக் கூடிய நம்ம ஆண் குழந்தைகளைப் படிக்க வச்சாலும் பலன் இருக்கும்.''

—வழக்கம் போல் பார்வதி மவுனப் புன்னகை சிந்தினாள். நெடுநாள் அவள் இருக்கவில்லை. பூவோடும், பொட்டோடும் போய்ச் சேர்ந்தாள்.

ஆனந்தன் வேலையிலிருந்து ஓய்வு பெற்று ஒரு மாதம் ஓடிவிட்டது. உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்போடு பெண்களின் படிப்பை நிறுத்தி விட்டான். மாமியார் லட்சுமியும் அவனை வற்புறுத்தவில்லை.

பாபுவும், சேகரும் பட்டப் படிப்பு முடித்து விட்டார்கள்.

சேகர், ஆனந்தன் பணியாற்றிய மின்சார வாரியத்திலேயே ஒரு வேலையில் சேர்ந்து விட்டான்.

பிராவிடண்ட் பண்ட், இதர வைப்புத் தொகைகளைக் கொண்டு சிக்கனமான முறையில் பெண்கள் இருவரையும் கல்யாணம் செய்து கொடுத்து விட்டான் ஆனந்தன்.

பாபு, சேகர் இவர்களின் கல்லூரிப் படிப்புக்கென்று வீட்டின் பேரில் கணிசமான தொகை கடன் வாங்கும்படி ஆகிவிட்டது. இருந்தாலும் .வேலைக்குப் போனவுடன் அந்தக் கடனை அடைத்து விடுவதாகப் பையன்கள் சொல்லியிருந்தார்கள்.

மேலும் சில ஆண்டுகள் கழிந்து விட்டன.

ஒருநாள், மாலை ஆறு மணி இருக்கும்.

முற்றத்துக் குறட்டில் உட்கார்ந்து ஆகாயத்தில் தெரிந்த நட்சத்திரங்களையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார் ஆனந்தன்.

புரோக்கர் பொன்னுசாமி காலையில் வந்து சேகருக்கு நல்லதொரு வரன் இருப்பதாகவும் ஸ்கூட்டர் வாங்கிக் கொடுத்து நிறைய பவுன் நகைகள் போடுவார்கள் என்றும் சொல்லிவிட்டுப் போயிருந்தார். ஆனந்தனும் 'சரி' என்று சொல்லி அனுப்பி விட்டார்.

''சேகர்... கொஞ்சம் இப்படி வா...''

''என்னப்பா...''



''நீ வேலைக்குப் போக ஆரம்பிச்சு மூணு வருஷம் ஆயிட்டுது. நம்ம வீட்டின் பேரிலே வாங்கிய கடனுக்கு இதுவரைக்கும் எவ்வளவு பணம் கட்டி இருக்கிறே...?'' என்று கேட்டார் ஆனந்தன்.

''ஏதுப்பா பணம்... என் சொந்தச் செலவுகள் போக, மிச்சம் உள்ள பணத்தைத் தான் உங்ககிட்டே கொண்டு வந்து கொடுத் துடறேனே... அப்புறம் கடனுக்குக் கட்டுற துக்கு நான் எங்கே போவேன் பணத்துக்கு..'' என்று சேகர் பளிரென்று கேட்டபோது—

சுரீரென்று ஏதோ ஒன்று ஆனந்தனின் நெஞ்சில் தைப்பது போலிருந்தது.

அவன் சொன்ன பதில் மட்டும் அதற்குக் காரணம் அல்ல.

காலையில் புரோக்கர் பொன்னுசாமி வந்து சொல்லிவிட்டுப் போன பிறகு, சேகரின் அறையினுள் நுழைந்து அவன் மேசையை நோட்டம் விட்டபோது, பாங்க் பாஸ் புத்தகம் ஒன்று கிடப்பது தெரிந்தது.

அதைக் கையில் எடுத்துப் பார்த்தார் ஆனந்தன்.

மாதா மாதம் சம்பளம் வாங்கியதும் நூறு ரூபாய் வீதம் தன் பெயரில் போட்டு வந்திருக்கிறான் சேகர். அது இன்று ஓரளவு கணிசமான தொகையாக உயர்ந்துவிட்டிருந் தது. அதைப் பற்றித் தன்னிடம் அவன் எதுவுமே சொல்லவில்லையே என்பதை நினைத்துப் பார்த்த ஆனந்தனின் நெஞ்சு லேசாக வலிக்கத் துவங்கியது.

—சேகர் தன் அறைக்குப் போய் விட்டான்.

மறுநாள் காலையில், கொல்லைக் கிணற் றடியில் வேப்பங்குச்சியினால் பல் துலக்கிக் கொண்டிருந்த பாபுவிடம், முதல்நாள் தனக்கும், சேகருக்கும் நடந்த வாக்கு வாதத்தைப் பற்றிக் குறிப்பிட்ட ஆனந்தன், தன்னிடம், சேகர் பணம் சேர்ப்பதை ஏன் மறைக்க வேண்டும் என்றும் கேட்டார்.

''அப்பா... சேகர் மேலே தப்பு ஒண்ணும் இல்லே... தப்பு எல்லாம் உங்க மேல்தான்... எங்களுக்கு விவரம் தெரிஞ்ச பிறகு, நீங்க எங்கட்ட அந்தரங்க விஷயங்களிலேயெல் லாம் எந்த வகையிலேயும் தலையிடாமே இருப்பது தான் சண்ணியம். வயசுக்கு வந்த, விவரம் தெரிந்த ஆண் பிள்ளைக ளாகிய நாங்கள், ஒவ்வொரு விஷயத்தையும் —அப்பாவாகிய நீங்கள் இருந்தாலும்—உங்க கிட்டே உள்ளது உள்ளபடி சொல்ல முடி யாது... நீங்கதான் கவுரவமா ஒதுங்கிக் கணும்...''

மாலை ஆறு மணி இருக்கும்.

லட்சுமி அம்மாள் பக்கத்து வீட்டுக்கு ஏதோ கதை பேசுவதற்காகப் போய் விட் டிருந்தாள்.

அடியுண்ட வாழையாக, நிலை பெயர்ந்த ஆல விருட்சமெனச் சோர்ந்து போய்ப் பாயில் படுத்துக் கிடந்தார் ஆனந்தன்.

புரோக்கர் பொன்னுசாமி உள்ளே வந் தார்.

''என்ன ஓய் ஆனந்தன்... விளக்கு வைக்கிற நேரத்திலே இப்படிப் படுத்துக் கிடக்குறீர்... உம்ம பையன் என்ன சொன் னான்... ஆவணியிலேயே ஒரு தேதியை வச்சுடலாமா...?''

''பொன்னுசாமி... என்னை மன்னிச்சு டுங்க... என்னோட பையனுங்க என்னோட வார்த்தையைக் காப்பாத்துவாங்கன்னு என் னாலே உறுதியாச் சொல்ல முடியலே...''

''என்னய்யா இது... காலமெல்லாம் பையனுங்க... பையனுங்கன்னு உயிரையே விட்டீங்க...'' என்று அங்கலாய்த்தார் பொன்னுசாமி.

''இப்ப... நிஜமாகவே உயிரை விட்டுட ணும்னுதான் ஆசைப்படுறேன். பரம்பரைப் பரம்பரையா வந்த வீடு. இப்ப இந்த வீடு கடனிலே இருக்கு. சாகிறதுக்குள்ளே இந்த வீட்டைக் கடனிலேயிருந்து மீட்டு விடணும். விலங்கும் இல்லாத நிலையிலே, என் வீட் டிலே சுதந்திரமா என் உயிர் பிரியணும். இதுதான் இப்ப எனக்கு உள்ள ஒரே பிரச்னை...''

''ஆனந்தன்... நான் சொல்றேன்னு கோவிச்சுக்காதேய்யா. பேசாமே உம்ம பொண்ணுங்க வீட்டுக்குப் போயி கொஞ்ச நாள் ஓய்வு எடுத்துக்கிட்டு வாரும்யா... எல்லாம் சரியாப் போயிடும்...''

—அவர் எழுந்து விட்டார்.

பெண்கள்... அவருடைய பெண்கள்... அவர்களைப் பற்றி அவர் வாழ்நாளில் அதிகம் சிந்தித்ததே இல்லையே... அவர்கள் வெறும் விறகுகள். வெட்டப்பட்ட கிளைகள் என்றல் லவா நினைத்து வந்தார்...

காலையில் எழுந்ததும் முதல் காரியமாகத் தன் மாமியார் லட்சுமி அம்மாளிடம் மட்டும் சொல்லிவிட்டுப் பெரிய பெண் ரம்யாவின் வீட்டுக்குப் புறப்பட்டார் ஆனந்தன்.

வீட்டினுள் நுழையும் போதே ஆவல் பொங்க ஓடிவந்து வரவேற்றாள் ரம்யா.

நாலு வருஷம் முன் திருமதி இந்திரா, ராஜீவை அரசியலில் நுழைத் தார். இப்போது ராஜீவ் இந்தியாவின் பிரதமர். இதே சூழ்நிலை இப்போது சிங்கப்பூரிலும் நிலவுகிறது. சிங்கப்பூர் பிரதமர் லீ குவான் யூ: தம்முடைய மகன் 'லீ சியென் லூங்'கை அரசியலில் நுழைத்துள்ளார்.

ஆதாரம்: ஸண்டே அப்ஸர்வர்.

—ராஜேஸ்வரி.



சிங்கப்பூரிலும் இளம் பிரதமர் ரெடி!

ஆ... சில ஆண்டுகளுக்குப் பிறகு இப்பொழுது தான் தாய்மைப்பேறு அடைந்திருக்கிறுள் போலிருக்கிறது. அசப்பில்—சிரிப்பில் சாட்சாத் பார்வதியேதான்!

''அப்பா... சவுக்கியமா இருக்கீங்களா..? ஏன்... பாட்டியையும் அழைச்சிட்டு வரப்படாதா...?'' என்றவாறு ஆனந்தனை வரவேற்று, உட்காரச் செய்து சூடாகக் காப்பியும் கொண்டு வந்து கொடுத்தாள்.

அடுக்களையினுள்ளிருந்து வேணி வெளியே வந்தாள்.

''வேணி... நீ எப்ப இங்கே வந்தே...?'' என்று வியப்புடன் கேட்டார் ஆனந்தன்.

''என்னப்பா செய்வது? அம்மா இருந்திருந்தால், நேராக ரம்யா அங்கே வந்திருப்பாள்... இல்லேன்னு... அம்மாவாவது இங்கே வந்திருப்பாள்... தாய்மைப்பேறு அடைஞ்சிருக்கா. எனக்குக் கடிதம் போட்டா. பத்து நாளா இங்கே வந்து தங்கியிருந்து அவளுக்கு வாய்க்கு ருசியா ஆசைப்பட்டதையெல்லாம் சமைத்துப் போட்டுட்டிருக்கேன்... இனிமேல் வளைகாப்பு வேறே இருக்கு...''

உணர்ச்சிப் பெருக்கில் ஆனந்தனுல் எதுவும் பேச முடியவில்லை.

ரம்யாவின் கணவர், மாலையில் வேலை முடித்து வீடு திரும்பியவர், எவ்விதக் குறைவுமின்றி மாமனுரை அன்புடன் வரவேற்ருர்; உபசரித்தார்.

இரவு. அவர் பக்கத்தில் ரம்யாவும் வேணியும் உட்கார்ந்திருந்தார்கள்.

தம்முடைய மகன்கள் தம் விஷயத்தில் அலட்சியமாக நடந்து கொள்வதைப் பற்றி வேதனையோடு சொல்லியிருந்தார் ஆனந்தன்.

''அப்பா... நீங்க எத்தனை நாள் வேணும்னுலும் இங்கேயே தங்கிக் கொள்ளுங்க. என்ன பணிவிடை வேணும்னுலும் நான் செய்யுறேன்...'' என்ருள் ரம்யா.

''அப்பா... நீங்க பேசாமே என் வீட்டுக்கு வந்துடுங்க. உங்களுக்கு எல்லாப் பணிவிடைகளையும் நான் செய்யறேன்.'' என்ருள் வேணி.

—இரண்டு பேர்களுமே கெஞ்சினுர்கள்.

''என்னப்பா யோசனை பண்றீங்க..., உங்க தத்துவப்படி, நாங்கள் விருட்சத்தினின்றும் வெட்டப்பட்ட கிளைகள், அவைகள் காய்ந்து விறகாகி, எரிந்து சாம்பலாகிவிடக் கூடியவை. அப்படித்தானே... அப்படிச் சாம்பலான பிறகும் கூட, வேருெரு விருட்சம் வளரப் பயன்படும் எருவாகத்தான் அந்தச் சாம்பல் இருக்கும்கிறதை நீங்கள் மறந்து விடக் கூடாது...'' என்ருள் ரம்யா.

வேணி தொடர்ந்தாள்: ''அப்பா... இன்னென்று... விருட்சத்தினின்று வெட்டப்படும் கிளைகள் எல்லாமே விறகாகத்தான் ஆக வேண்டும் என்பதில்லை. அந்தக் கிளைகளையும் வேலியோரம் நட்டு நீர் ஊற்றி வந்தால் பெரிய விருட்சமாக வளரும். எங்கள் வீட்டுக் கொல்லையில் பெரிய பூவரச மரங்களாக உள்ளவை எல்லாம் உங்களைப் போன்ற லைன்மேன் வெட்டி எறிந்துவிட்டுப் போனவைகளை எடுத்து நட்டு வைத்து வளர்த்தவைதான்...'' என்ருள் வேணி.

அனுயாசமாக அந்தக் காலத்தில் தான் சொன்ன சொற்கள், இன்று அர்த்தபுஷ்டியுடன் தன் மீதே கூர்மையாகப் பாய்கின்ற நிலையைக் கண்டு பேச முடியாமல் தவித்தார் ஆனந்தன்.

''ரம்யா... வேணி... நீங்க சொல்றதெல்லாம் உண்மைதான். உங்க விஷயத்திலே நான் போட்ட கணக்கு தப்பாகத்தான் போயிட்டுது. இருந்தாலும், உங்க அம்மா இறந்த அந்த வீட்டிலே... என்னுடைய பூர்வீக வீட்டிலேதான் நான் சாக விரும்பறேன்... அந்த வீட்டின் மேலே இருக்கிற கடனைக் கொடுத்து அந்த வீட்டைமொதல்ல மீட்டாகணும்...''

ஆனந்தன் பேசி முடித்ததும், ரம்யா மௌனமாக எழுந்து சென்று, மேஜையைத் திறந்து, நீளமான கவர் ஒன்றை எடுத்துக் கொண்டு வந்து ஆனந்தனிடம் நீட்டினுள்.

''அப்பா... நானும் வேணியும் தையல் கத்துக்கிட்டோம். ஓய்வு நேரங்களிலே தையல் தொழிலை வீட்டிலிருந்தே செய்தோம். அதின் மூலம் கிடைத்த தொகையை வீட்டின் பேரிலிருந்த கடனுக்கு வரவு வைத்தோம். போன வாரம்தான் கடன் கொடுத்தவர், வீட்டுப் பத்திரத்தைக் கொண்டு வந்து கொடுத்து விட்டுப்போனுர். இதோ... உங்க வீட்டுப் பத்திரம்... இனி அது வில்லங்கம் இல்லாத வீடு... பூரண உரிமையோட நீங்க பயன்படுத்திக் கொள்ளலாம்.''

—பெண்கள் இருவரும் எழுந்து போய் விட்டார்கள்.

ஆனந்தனின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிக் கொண்டே இருந்தது...

---

மகாராஷ்டிர முதல்வர் வசந்ததாதா பாடீலின் மகள் விஜயா நடிகையாகி விட்டார்! 'முக்வி ஜானி ஹேறா' என்னும் மலையாளப் படத்தில் விஜயா நடிக்கிறுர். விஜயா இதுவரை அழகுக் கலை நிபுணராகவும் நடனப் பெண்மணியாகவும் இருந்தவர். 'எனக்கு நடிப்பைப் பற்றி அதிகம் தெரியாது. நான் வேடிக்கையாக நடிக்கத்துவங்கி விட்டேன்' என்கிருர் விஜயா. அடுத்தாற்போல் வேடிக்கையாக அரசியலில் புகுந்து விடுவாரோ?

—தோபஞ்சு.

**நடிகையாகி விட்டாள்!**

இவர் மகள்





# மோகினி திருக்கோலம்

**12**

## பணயம் கொடுங்கள்!

**வா**யிலில் ஓசை விகாரங்கள் கேட்க ஆலோசனைக் கூடத்துள் சேவகன் ஓடிவந்து நிற்க, கார்வேட் ராஜா நிதானம் இழக்காமல் எச்சரிக்கை குறையாமல் ''என்ன?'' என்று கேட்டார்.

''ஆறுவெள்ளைக்காரர் வந்திருக்கிறார்கள். அவர்களோடு நம்ம வீரன் வாளுகச்சண்டை போடுகிறான்!'' என்றான்.

ராஜா சட்டென்று எழுந்து சீனிவாசாச்சாரியை நோக்கி, ''சுவாமி! ஆபத்து வந்திருக்கிறது! நீங்கள் ஒளிந்து கொள்ளுங்கள்! வனமாளிகைக்குப் போங்கள்!'' என்று பரபரப்பாகக் கூறிவிட்டு,

அரைக்கணமும் தாமதியாமல் வாயிலுக்கு விரைந்தார்.

அங்கே பார்த்த காட்சி அவரை ஸ்தம்பிக்க வைத்தது.

யார் அவன்?

வர்மன் என்று அழைக்கப்பட்ட பாளையக்காரனா?

இந்திரன் போல நிற்கிறானே! வஜ்ரம் போலக் கைவீசுகிறதே! வாள் நொடிக்கு ஒரு சீவு சீவுகிறதே! முகத்தில் வியர்வையோடு வீரம் வழிகிறதே! வைத்த அடி எல்லாம் பூமி அதிர்கிறதே!

அருமையான வீரன்தான் இவன்.

ஆனால் யாருடன் சண்டை போடுகிறான்! இங்கிலீஷ்காரர் கூடவா?

ராஜா திகைத்தார்.

வர்மன் சூறைக் காற்றாகச் சுற்ற இரண்டு இங்கிலீஷ்காரர்கள் அவனைக் கஷ்டத்துடன் சமாளித்துக் கொண்டிருந்தார்கள்.

மற்றவர்கள் அஞ்சிப் பின்னால் நின்றுகொண்டிருந்தார்கள்.




கார்வேட் ராஜா நிலைமை உணர்ந்து 'வர்மா போதும்! வர்மா போதும்!'' என்று இரைந்தார்.

மறு திசையிலிருந்து வந்திருந்த சிந்து: ''வீரரே போதும்! வீரரே, போதும்!'' என்று இரைந்தாள்.

சின்ன வாயைத் திறந்து நின்ற செஞ்சுகாவின் கால்கள் திரையை மிதித்து ஜதி செய்தன.

வர்மன் சட்டென்று வாளை மேலே தூக்கி 'ஹோ' என்று இரைந்து சண்டையை நிறுத்தினான்.

வீரத் தளும்பலுடன் ஒரு பார்வையைச் சிந்து மேல் எறிந்து அடக்கமுடன் படிகள் ஏறினான்.

''பிரபு! திருப்பதி சுவாமியின் பணம் கேட்க வந்தேன் என்றான் இந்த மிலேச்சன்!'' என்று வெப்பங்கசப்பாக வார்த்தையைக் கொட்டிவிட்டு ராஜா அருகில் போய் நின்றான்.

''வர்மா! அவர்கள் நமது நவாபின் நண்பர்கள். நவாபுக்குச் சேர வேண்டியதை இவர்கள் வசூலிக்க வந்திருக்கிறார்கள்'' என்று சொல்லி,

அந்த இங்கிலீஷ் கும்பலின் துபாஷியாக இருந்த அச்சையா என்பவரை நோக்கி,

''ஐயா! வரவேண்டும், வரவேண்டும்! தெரியாமல் இந்த இளைஞன் தங்களை மறித்து விட்டான்!'' என்று கூறி இரு கைகளையும் விரித்து நீட்டினார்.

இங்கிலீஷ் சிப்பாய்கள் மிரட்சியுடன் தலை கலைந்து நிற்க, அவர்கள் தலைவன் ஜான் ஸாவேஜ் என்பவன் கார்வேட் ராஜாவுக்கு வணக்கம் தெரிவித்தான்.

''இந்தா வர்மா, நீ செய்தது தப்பிதம்! நம் நண்பர்களுக்கு இப்போது வணக்கம் தெரிவி!'' என,

வர்மன் சற்றுக் கூச்சம் மேலிட்டவனாகக் கையை எடுத்துக் கும்பிட்டான்.

பிறகு ஸாவேஜும் இதரர்களும் உள்ளே போக, அவர்களுடன் வந்த ஊழியர்கள், பல்லக்கு, குதிரை, பரிவாரங்களுடன் வாசல் ஓரங்களில் அமர்ந்து விட்டார்கள்.

''வீரரே, என்ன தப்பிதம் செய்தீர்?'' என்று அவனைத் தனியாக மறுபக்கம் அழைத்துப் போன சிந்து கேட்டாள்!

''இந்த நேரத்தில் காரியத்தைக் கெடுத்திருப்பீர்களே! அவர்களை வழி மறிக்கலாமா? நம் உடன்படிக்கைக் குழு இங்கே தங்கி இருக்கிறது என்று தெரிந்தால் நமது ராஜாவுக்கு ஆபத்து ஆயிற்றே!'' என்றாள்.

வர்மன் இடுப்பிலிருந்துவாள் கச்சத்தைக் கழற்றினான். அவனது புஜத்தையும் மார்பு விரிவையும் பார்த்தாள் செஞ்சுகா.

''ஏன் அக்கா! அவர் செய்தது சரி தானே?'' என்றாள்.

வர்மன் தனது பார்வையைக் கம்பீரமாகத் திருப்பினான்.

அதை எதிர்பார்த்தே செஞ்சுகா தனது சிறு மைகுழைத்த பார்வையைக் குறுக்கே நீட்ட, இரண்டும் வெட்டிக் கொண்டு நின்றன.

''வீரரே! இப்போது நமக்கு இருக்கும் பலத்தில் நவாபையோ, இங்கிலீஷ்காரரையோ, பிரெஞ்சுக்காரரையோ எதிர்த்து விட முடியாது. மெல்ல மெல்ல சதி செய்து தான் வெல்ல வேண்டும். அவசரப்படாதீர்கள்! காரியம் கெட்டுவிடப்போகிறது!'' என்றாள்.

''நல்லது அம்மணி! ஏதோ உணர்ச்சி வசப்பட்டேன்! இருந்தாலும் சொல்லுங்கள். நிலத்தின் தீர்வையை வாங்கிப் போகலாம்! திருப்பதிப் பெருமாளின் பணத்தை வாங்கிப் போகலாமோ? அத்தனையும் காணிக்கை ஆயிற்றே?''

''பெருமாளின் வருமானம் எல்லாம் ஆர்க்காட்டு நவாபுக்குச் சொந்தம்! அவரது மேற்பார்வையில் தான் திருப்பதி இருக்கிறது!'' என்றாள் சிந்து.

''இருந்தால் என்ன? கோயில் சொத்தை நவாப் கேட்கலாமா?''

''அந்த நியாயம் எல்லாம் இப்போது கேட்கிறீர்கள்? திருப்பதியின் சொத்து எல்லா ராஜாக்கள் கண்களிலும் பட்டு விட்டது. பரங்கிக்காரன் கண்ணிலும் பட்டு விட்டது. நிலைக்குத் தலை பணத்தைப் பிடுங்க முயல்கிறார்கள்.''

''இந்த இங்கிலீஷ்காரன் ஏன் இங்கே வந்தான்?''

''அவர்களுக்கு நவாபு அங்கீகாரம் அளித்திருக்கிறார்!''

''ஏன் செய்தார்?''

''நவாபின் நண்பர்கள் அவர்கள்! கூட்டாளிகள்! படை கொடுப்பவர்கள்!''

''ஓகோ, இவர்கள் முகம்மதலியின் ஆட்களா?''



''ஆமாம்! உங்களுக்கு விஷயம் புரியத் தொடங்கி விட்டதே!''

'ஹூம்!' என்று பெருமூச்சு விட்டான் வர்மன். ''இருந்தும் என் மனம் கேட்கவில்லை, ஏழை பக்தர்கள் கடவுளுக்குக் காணிக்கையாகக் கொடுப்பதை அரசர்கள் எடுத்துக் கொள்வதா?''

சிந்து அதற்குமேல் பேசவில்லை! அதுவரை கையைப் பிசைந்தும், காலை மாற்றியும், தலையைத் திருகியும் ஏதாவது ஒரு சிருங்கார நயம் பண்ணிக் கொண்டிருந்த செங்கமலவைப் பார்த்து,

''வா செங்கமலா போகலாம்!'' என்றாள்.

''இரு அக்கா! இவருக்கு என் கிளிகளைக் காட்ட வேண்டாமா?'' என்று மாடங்கள் பக்கம் தொங்கிக் கொண்டிருந்த கூண்டுகளைக் காட்ட,



''அதற்கு இப்போதா நேரம்? உள்ளே என்ன பேச்சு நடக்கிறதோ, எதில் போய் முடியுமோ, நேரம் சரியில்லை வா!'' என்றாள்.

பிறகு அவளே செங்கமலவின் கைகளைப் பிடித்து இழுத்துப் போக,

கீழே பளிங்கான தரையில் இருவரும் சித்திரமயமான பிம்பங்களைத் தவழ விட்டுக் கொண்டே செல்லுகிறார்கள்.

ஆரத்தில் திரும்பும் இடத்தில் சென்ற செங்கமலா,

ஒரே ஒரு பார்வையைத் திருப்பி அவன் மீது வீச, வர்மனின் மனம் அடிபட்டது போல் சுருண்டது.

பின்புறத்து வனத்தை நோக்கி, சற்று ஆனந்த நடையில் அவன் சென்றபோது, ''சிந்து! உன்னையும் மறக்க மாட்டேன்!'' என்று மனத்துள் கூறினான்.

''உன்னையும் என்று 'உம்' போடுகிறாயே! அப்போது வேறு ஒருத்தரும் இருக்கிறாரா?'' என்று மனம் கேட்டதற்கு அவனிடம் பதில் இல்லை.

உள்ளே ஆலோசனை மண்டபத்தில் தீப் பறந்து கொண்டிருந்தது.

''என்ன பணயம் கேட்கிறாரா, குவர்னர்?'' என்று சீற்றமுடன் கேட்டார் கார்வேட் ராஜா.

''ஆமாம்! உங்களை நம்புவதற்கில்லை என்று எங்கள் கவுன்ஸில் முடிவெடுத்திருக்கிறது!'' என்றார் ஸாவேஜ்!



கொச்சைத் தமிழில் ஸாவேஜ் பேசினார். அவசியம் நேர்ந்தபோது அதைத் தமிழ்ப் படுத்திச் சொன்னார் அச்சையா.

''ஏன்! இதுவரை ஒழுங்காகத்தானே அனுப்பி வந்திருக்கிறோம்!'' என்றார் அவர்.

''இப்போது கணக்கம் வந்துவிட்டதே!''

''ஐயா, ஸாவேஜ் துரையே! வெளிப்படையாகச் சொல்லவா?''

''சொல்லுங்கள்!''

''இப்போது ஆர்க்காடு சுபாவுக்கு யார் நவாப்? முகம்மதலியா? சந்தாசாகிப்பா?''

''முகம்மதலிதான்!''

''நீங்கள் சொல்கிறீர்கள்! சந்தாசாகிப் எனக்குத் தான் பணம் சொந்தம் என்று அவர் வேறு ஆள் அனுப்பியிருக்கிறாரே, என்னை மிரட்டியிருக்கிறாரே! நாங்கள் யாருக்குக் கொடுப்பது?''



எனது ஆறு வயதுச்
செல்வி பரத
நாட்டியம் நன்கு
ஆடுகிறாள்.
"நானிலய உலகமே
அவளது மேடையாம்."

# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள்
நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!

வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்ட்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்புவதேன்? போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் தங்களுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்ததல்ல என்று வலியுறுத்திக் கூறுவதேன்?

அதில்...உற்சாகம் தள்ளும் சுவை மட்டுமல்ல, காட்பரியின் பிரபல பெயர் மட்டுமல்ல. அவற்றைவிட அதிகமோ அதிகம். அதுதான் போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

காட்பரிஸ்
**போர்ன்விடா**
நல்ல வளர்ச்சி,
போர்ன்விடா பயிற்சி.

1 கிலோ பேக்கிலும்
கிடைக்கிறது.
அதன் உள்ளே ௧௦
இலவசக்
கூபன்.




OBM/3783 TAM

''நீங்கள் எங்களுக்குத்தான் கொடுக்க வேண்டும். முகம்மதலிதான் நவாப். இடையே தோன்றிவிட்ட சந்தாசாகிப் ஒரு ஏமாற்றுக்காரர்!''

''சரி! கொடுத்து விடுகிறோம்! உங்கள் திவான் தான் இங்கே இருக்கிறாரே! கவலைப் பட வேண்டாம்!''

''சம்பத்ராவ்!'' என்று அவரை அழைத்தார் ஸாவேஜ்! அதில் கடுமை சிறிது இருந்தது.

''நீங்கள் பணம் சரிவரக் கிடைக்கவில்லை என்றுதானே குவர்னருக்கு எழுதியிருக்கிறீர்கள்?''

''ஆமாம் துரையே! சீனிவாசாச்சாரி என் கண்ணில் படுவதே இல்லை!'' என்றார் சம்பத்ராவ்.

''இதற்கு என்ன சொல்கிறீர்கள்?'' என்றார், ஸாவேஜ் ராஜாவைப் பார்த்து!

''அவரும் யாருக்குக் கொடுப்பது என்று தெரியாமல் பயப்படுகிறார், போதும்!''

''பயப்படுகிறாரா! ஆள் தென்படுவதே இல்லையாமே! எங்கே அமுல்தார்?'' என்றார் ஸாவேஜ்.

அவர்களது சிப்பந்தி ஒருவன் வாசலுக்கு ஓடிப்போய்த் திருப்பதி அமுல்தார் வாசு தேவாச்சாரியை அழைத்து வந்தான்.

''பிரபு! சீனிவாசாச்சாரி தலைமறைவாகவே இருக்கிறார்!'' என்றார் அவர்.

''சரி, இப்போது தான் எனக்குப் புரிய வருகிறது. இனி கவனிக்கிறேன்'' என்றார் ராஜா.

''உங்கள் பேச்சை நம்புவதற்கில்லை! பணத்திற்கு ஈடாகப் பணயத்தைத் தாருங்கள்! பணம் கொடுத்த பிறகு மீட்டுப் போங்கள்!''

''நான் யாரைப் பணயம் கொடுப்பேன்!''

''உங்கள் பெண் செஞ்சுகாவைக் கொடுங்கள்!''

''என்ன?'' என்று அதிர்ச்சியில் கேட்டார் ராஜா! ''என் பெண்ணையா கேட்கிறீர்கள்?''

''ஆமாம். அவளே தான் வேண்டும். அவளுக்கு எந்தத் தீங்கும் வராமல் உத்தரவாதம் அளிக்கிறோம்.''

ராஜாவின் கண்களில் நீர் வந்தது: ''ஐயா, பணயம் கேட்காதீர்கள். ஒருவாரத்தில் அரை லட்சம் ரூபாய் அனுப்புகிறேன். மீதியைச் சீக்கிரம் அனுப்பி வைக்கிறேன்'' என்றார், உருக்கமாக.

''இல்லை. நம்புவதற்கில்லை. பணயம் கொடுங்கள். பணம் கொடுத்த பின் அழைத்துச் செல்லுங்கள்!''

''துரையே, இது நியாயமில்லை...''

ஸாவேஜ் சட்டென்று எழுந்தார்.

''இதை ஒத்துக் கொள்ளுங்கள்! இல்லாவிடில் நவாப் தங்கள் ஜமீனை வேறு ஒருவருக்குக் கொடுப்பதாக இருக்கிறார். மாலையில் புறப்படுகிறோம். அதற்குள் பதில் வேண்டும்.''

ஸாவேஜ் நிற்காமலேயே சொல்லிவிட்டுப் போனார்.

சிறிதுநேரத்தில் அரண்மனை அமளிதுமளி ஆகியது. (தொடரும்)

## அருள்வாக்கு

உலக வாழ்வில் சகல மனிதர்களுக்கும் அளவில்லாத கஷ்டங்கள் உண்டாகத்தான் செய்யும். பணக்காரன்.பெரிய பதவியில் இருப்பவன் கஷ்டமில்லாமல் இருப்பதாக மற்றவர்கள் நினைக்கலாம். அப்படி நினைத்துத் தாங்களும் அவர்களைப் போலப் பணமும் பதவியும் பெறப் பாடுபடலாம். ஆனால் பணக்காரனை, பதவியில் உள்ளவனைக் கேட்டால் தெரியும், அவனுக்கு எத்தனை கஷ்டங்கள் என்று. நாம் திண்ணையில் இருக்கிறோம். விழுந்தால் சிராய்த்துக் கொள்வதோடோ, சுளுக்காவதோடோ போய்விடும். பணக்காரனும், பதவிக்காரனும் மாடிமேல் இருக்கிறான்.



எனவே அவன் விழுந்தால் எலும்பெல்லாம் முறிந்து போகும். பிராணபத்து ஆகும். ஒருவனுக்குப் பணமும் பதவியும் உள்ள போதே அதனால் உண்டாகிற சிறிது சுகத்தோடு கூட பணம், பதவி போகக் கூடாது என்ற கவலை சுகத்தை விட அதிகமாக இருக்கிறது. இதனால் தான் உலகத்தில் எவனுமே தான் சந்தோஷமாக இருப்பதாகச் சொல்லக் காணோம்! ஒவ்வொருவனும் தானே மகா புத்திசாலி, தானே மிகவும் யோக்கியன், தானே ரொம்ப அழகு என்று நினைத்துக் கொண்டிருப்பது போல் அதிகத் துக்கமுள்ளவனும் தானே என்று நினைத்துக் கொண்டிருக்கிறான்.

துக்கம் நம் உடன்பிறப்பு. நம் பூர்வ கர்ம வினையின் பயனாக இந்தத் துக்கங்களுக்கு நாம் முன்னமேயே விதை போட்டிருக்கிறோம். இதிலிருந்து தப்ப வழியில்லை.

ஆனால் கர்மத்தினால் ஏற்படும் கஷ்டத்தைப் பொறுத்துக் கொண்டு சாந்தமாக இருக்க வழி உண்டு. புதிதாகக் கர்ம மூட்டையைப் பெருக்கிக் கொண்டு எதிர்காலத்தில் கஷ்டத்தை அதிகமாக்கிக் கொள்ளாமலிருக்க வழி உண்டு. அந்த வழி நாம் எல்லோரும் பரம்பொருளைப் பற்றிய உண்மையான ஞானத்தைப் பெற முயல்வது தான். இந்த ஞானம் என்பது என்ன? பரம்பொருளைத் தவிர வேறெதுவுமே இல்லை என்பதுதான்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்



வட்டமேஜை

# ராஜீவ் பிரதமராவது உறுதி

● ''தமிழகத்தில் ஆட்சி மாறுமா?'' கட்டுரையில் என்னைக் ''கண்ணனின் ஆள்'' என்றும் அமைச்சருக்கு எதிராக நான் வேலை செய்வதாகவும் மிகவும் பொறுப்பற்ற முறையிலும் உண்மைக்குப் புறம்பாகவும் எழுதப்பட்டுள்ளது.

பாவலர் எம். முத்துசாமி
மாநில திட்டக்கமிஷன், துணைத்தலைவர்

● ''சிந்தித்துச் செயல்படுவோம்'' தலையங்கம் மூலம் கல்கி தனது தரத்தைக் குறைத்துக் கொண்டுவிட்டது. நடுநிலையில் இருந்து தவறி விட்டது. உமது எண்ணத்திற்கு மாறாய் அனுதாப அலை இல்லாமலேயே ராஜீவ் வெற்றி பெற்றுப் பிரதமராவது உறுதி.

பரசலூர் ஆர். நாகராஜன்.

● கடந்த நான்கு வாரங்களாகச் சிந்தித்துச் செயல்படுவோம் எனத் தலையங்கம் மூலம் விருப்பு, வெறுப்பற்ற முறையில் பல உண்மைகளையும், கொள்கைகளையும் விளக்கியதுடன் சரியான முடிவுக்கு வாசகர்கள் வரத் தாங்கள் கையாண்ட வாதங்கள் பாராட்டக் கூடியதாக அமைந்தது.

கோவை—43, என். பாலகிருஷ்ணன்.

● இ. காங்கிரஸ், அ. தி. மு. க. அணிக்கு ஓட்டுப் போடாமல் எதிர்க்கட்சி அணிக்கு ஓட்டுப் போடுங்கள் என்று தலையங்கத்தில் எழுத வைத்தது. ''ஆதரிப்பீர் உதய சூரியன்'' என்ற விளம்பரந்தானோ என்ற சிறிய நெருடல் மனத்தில் தோன்றியுள்ளது.

சென்னை—5, குமரி ஜெய்.

நெருடும் ஐயத்தைத் துடைத்து விடுங்கள். விளம்பரத்துக்காகத் தலையங்கம் எழுதுவது எனில் ஆளும் கட்சிகளை ஆதரித்து இந்த இரு பக்கங்களுக்கும் பதில் 22 பக்கங்கள் பெற்றிருக்கலாமே! -ஆசிரியர்

● தமிழக பத்திரிகைகள் பல எதிர்க்கட்சிகள் விளம்பரத்தைப் போடவே பயந்து நடுங்கும் போது தாங்கள் தைரியமாய்ப் போட்டதற்கு எனது மனப்பூர்வமான பாராட்டு.

திருச்சி—14, கோகுலதாஸ்.

● தேர்தல் திருவிழாவில் மூன்று கோடியே ஐம்பது லட்சம் வாக்காளர்கள் பங்கு பெறுவார்கள் என்று எழுதியிருக்கிறீர்கள். (அமேதி முதல் அலகாபாத் வரை) கட்டுரை) இது முப்பது கோடியே ஐம்பது லட்சம் என்று இருக்க வேண்டும்.

சென்னை—59, ஸ்ரீநிவாஸன்.

கவனக்குறைவுக்கு வருந்துகிறோம். -ஆர்

● சொல்வதற்கு அருகதை இல்லை என்று சொல்லிக் கொண்டே, எவ்வளவு அழகாகப் புதுக்கவிதை, மரபுக்கவிதைகளின் வித்தியாசத்தை உவமைகளுடன் சொல்லிவிட்டார் கமல் என்பதை நினைக்கும்பொழுது இன்னும் வியப்பாகவே இருக்கிறது!

கிருஷ்ணகிரி, ஆர். பூபாலன்.

● தேர்தலைப் புறக்கணிக்க இப்படியும் சில கிராமங்கள் இருப்பதை நினைத்து ஒருபுறம் பெருமை. மறுபுறமோ அவர்களின் ஓட்டுக்கள் பயன்படுத்தப்படாததால் தகுதி அற்றவருக்கு வெற்றி போய்ச் சேரும் வாய்ப்புக்கும் இடம் உண்டே என்ற ஆதங்கமும் ஏற்படுகிறதே; என்ன செய்ய?

சென்னை—14, ஐயாறு எஸ். வாசுதேவன்

● பயங்கர வயிற்று வலிக்கு ஆளானேன். காரணம் 'நமது வோட்டு சிரிப்புக்கே!'

கரூர்—1, கு. சாகுல் அமீது.

● வருவாயைப் பெருக்கிக் கொள்ள விரும்புகிறவர்களுக்கு மட்டுமின்றி, சுய சம்பாத்தியத்திற்கே வழிதெரியாமல் இருப்பவர்களுக்கும் கூட வாசகர்கள் எழுதியிருக்கிற அந்த எளிய வழிகள் உதவும்.

நெல்லிக்குப்பம், ரா. ஜோதிராமன்.

● நல்ல கருத்துக்களைக் குடில் சிறுகதை மூலம் விளக்கிய கார்த்திகா ராஜ்குமாருக்கு என் பாராட்டுக்கள்.

கிருஷ்ணகிரி—2, எம். பீட்டர்.

● எங்கள் ஊர் திரையரங்கில் தமிழ்நாடு அரசு வரி விலக்கு அளித்த ''புதுமைப் பெண்'' திரையிடப்பட்டது. சுவரொட்டிகளில் குறைந்த கட்டணமாக விளம்பரப் படுத்தப்பட்டது. ஆனால் படம் பார்க்கச் செல்லும் அனைவரிடமும், வழக்கமான முதல் வகுப்புக் கட்டணத்தைப் பெற்றுக் கொண்டு, டிக்கெட் தராமல் கொட்டகை நிறைந்த போதும், உள்ளே அனுப்பினர். அநியாயங்களையும், அக்கிரமங்களையும் கதாநாயகன் எதிர்த்துப் போராடுவது போன்ற காட்சிகளைச் சினிமாவில் ரசித்துப் பார்க்கும் ஜனங்கள் இதைத் துணிவோடு தட்டிக்கேட்பதில்லையே!

இராசிபுரம், இரா. சம்பத்குமார்.

(கடை.சிக்கடிதம் பரிசு பெறுகிறது)

# ஹைடில்பர்க் பல்கலைக்கழகம்

## 11

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் கல்கியில் பொன்விலங்கு நாவலை எழுதிய போது அதன் இறுதிப் பகுதியில் மோகினியுடன் தன் காதல் நிறைவடையாமல் அவள் தற்கொலை செய்து கொண்டபின் கதாநாயகனான பேராசிரியர் சத்தியமூர்த்தி ஜெர்மனியில் ஹைடில்பர்க் – பல்கலைக்கழகத்தில் வேலை கிடைத்து இந்த நாட்டை விட்டே போய் விடுவதாக முடித்திருந்தேன். அப்போது நான் ஹைடில்பர்க்கைப் பார்த்ததில்லை. கேள்விப் பட்டதுதான். எதிர் காலத்தில் நான் அங்கே போக நேர்ந்து அதன் ஆராய்ச்சி மாணவர்கள், பேராசிரியர்கள் நடுவே 'தமிழ் இலக்கியத்தில் அங்கதச் சுவை' – என்ற தலைப்பில் பேசக்கூடும் என்று கற்பனை கூடச் செய்ததில்லை நான்.

பெர்லினில் எங்கள் பயணம் முடிந்து அங்கிருந்து ஸ்டுட்கார்ட் பறந்த போது ஹைடில்பர்க் பல்கலைக் கழகத்தின் தென் கிழக்கு ஆசியப்பிரிவு அனுப்பியிருந்த கடிதம் என் பையில் இருந்தது. பொழுது சாய்கிற நேரத்திற்குப் பெர்லின் டெகல் விமான நிலையத்திலிருந்து பான் அமெரிக்கன் விமானத்தில் புறப்பட்டு இரவு ஏழு ஏழரை மணி சுமாருக்கு ஸ்டுட்கார்ட்டிற்குப் போய்ச் சேர்ந்தோம்.

ஸ்டுட்கார்ட்டிலிருந்து ஒன்பது மணிக்குப் புறப்படும் ரயிலில் நான் மட்டும் 'ஹைடில் பர்க்' போய் விட்டு மறுநாள் ஸ்டுட்கார்ட் திரும்பி நண்பர்களோடு சேர்ந்து கொள்வது என்று ஏற்பாடு. ஹைடில்பர்க் பல்கலைக்கழகத்தின் தென்கிழக்கு ஆசியப் பிரிவில் பணிபுரியும் டாக்டர் தாமோதரன் அவர்களுக்குப் பெர்லினிலிருந்தே தொலைபேசி மூலம் தெரிவித்திருந்தேன். அவரை ஏற்கெனவே நான் மதுரையில் நடைபெற்ற உலகத்தமிழ் மகாநாட்டில் சந்தித்திருந்தேன். இரவு நேரமானதாலும், ஜெர்மனியில் எந்தத் துணையும் இன்றி முதல் முதலாக நானே செய்த தனிப் பயணமானதாலும் நண்பர் தாமோதரன் ஹைடில்பர்க் நிலையத்தில் என்னைச் சந்தித்து அழைத்துச் செல்ல வசதியாயிருக்கும் என்பதாலும், ஸ்டுட்கார்ட்டில் நான் புறப்படுகிற இரயில் பற்றி மறுபடி ஃபோன் செய்து உறுதிப் படுத்துவதாகச் சொல்லியிருந்தேன்.

ஸ்டுட்கார்ட்டில் விமான நிலையத்திற்கும், தங்கப் போகிற ஹோட்டலுக்கும் எவ்வளவு தூரமோ, ஹோட்டலுக்கும், இரயில் நிலையத்துக்கும் எவ்வளவு தூரமோ, என்றெல்லாம்

○ ஹைடல்பர்க அருகே மான்ஹெய்ம் நகர நீரூற்றுச் சதுக்கம்



தயக்கமும் பயமும் இருந்தன. ஆனால் ஸ்டுட் கார்ட்டை அடைந்து அங்கே எங்களுக்கு உதவ வந்திருந்த உள்ளூர் ஜெர்மன் உதவியாளரைச் சந்தித்ததும் என் தயக்கமும் கவலையும் பறந்து விட்டன. ஹோட்டலில் போய் இறங்கியதும் அவர் என்னை ஹைடில் பர்க்குக்கு இரயிலேற்றி அனுப்புவதாகஒப்புக் கொண்டார். ''இரயில் நிலையத்திற்கு அதிக தூரம் போக வேண்டியதில்லை. நாம் போய்த் தங்கப் போகிற 'ஹோட்டல் அம்ஸ் கூல்ஸ் கார்ட்டன் — எதிரேயே ஸ்டேஷன் இருக்கிறது'' — என்று அவர் கூறியது சற்று ஆறுதலாக இருந்தது.

ஆனால் வேறு ஒரு கவலை வந்து புகுந்து கொண்டது. நேரமோ இரவு. ஜெர்மன் இரயில்களோ எவ்வளவு பெரிய ஊராக இருந்தாலும் அரை நிமிஷம் ஒரு நிமிஷத்திற்கு மேல் நிற்பதில்லை. 'கடமுட' ஓசையில்லாத அந்த மிருதுவான இரயில்கள் எப்போது நிற்கின்றன, எப்போது புறப்படுகின்றன என்று கண்டுபிடிப்பதும் கூடச் சற்றே சிரமமான காரியம் தான். ஹைடில் பர்க்கைத் தவறவிட்டு விட்டால் அடுத்து எந்த நிலையத்தில் நிற்குமோ, எங்கே போய் இறங்க வேண்டி வருமோ என்று பதற்றமாயிருந்தது.

ஹோட்டலில் இருந்து டாக்டர் தாமோதரனுக்குப் ஃபோன் செய்து ''இரவு ஒன்பதடித்து மூன்று நிமிஷத்திற்குப் புறப்படுகிற இரயிலில் 'ஹைடில்பர்க்' வருகிறேன்'' — என்றேன். 'ஹைடில்பர்க் எத்தனையாவது நிலையம்?' — என்று விசாரித்த போது அவர் பதிலுக்குச் சிரித்துவிட்டு: ''அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம்! ஸ்டுட்கார்ட்டிலிருந்து நீங்கள் புறப்படுகிற இண்டர்சிடி எக்ஸ்பிரஸ் இரயில் அடுத்து நிற்கிற இடமே ஹைடில்பர்க்தான். ஸ்டுட்கார்ட்டிலிருந்து ஹைடில்பர்க்குக்குப் பிரயாண நேரம் ஒரு மணி ஒன்பது நிமிஷம். சரியாகப் பத்து பன்னிரண்டிற்கு எழுந்து நின்று இரயில் கதவைத் திறந்தீர்களாயின் நிற்கிற நிலையம் ஹைடில்பர்க்காக இருக்கும். தப்பாது'' — என்றார்.

எனக்கு ஆச்சரியமாயிருந்தது. இந்த ஊரில் இரயிலை வழிமறிக்கிறவர்கள், செயினைப் பிடித்து நிறுத்துகிறவர்கள், கல்லெறிகிறவர்கள், பந்த் நடத்துகிறவர்கள், 'ரயில் ரோக்கோ' மறியல் செய்கிறவர்கள் எல்லாம் இடையாது போலிருக்கிறது என்று நினைத்துக் கொண்டேன். நான் தாமோதரனிடம் சொல்லியிருந்த அந்தக் குறிப்பிட்ட இரயிலில் டிக்கெட் கிடைத்து இடம் கிடைத்துச் சொல்லியபடி போய்ச் சேர வேண்டுமே என்ற ஒரே ஒரு சிறிய கவலை மட்டும் மீதமிருந்தது. ஸ்டேஷனுக்குப் போனவுடன் அந்தக் கவலையும் தீர்ந்தது. டிக்கெட் வழங்க என்று திறந்திருந்த இரண்டு மூன்று கவுண்டர்களிலும் கூட்டமே இல்லை. அரை நொடியில் டிக்கெட் எடுக்க முடிந்தது. இரயில் புறப்பட வேண்டிய பிளாட்பாரத்தில் டிரெயின் நம்பர் — புறப்படும் நேரம் எல்லாம் குறித்து போர்டு இருந்தது. ஒன்பது மூன்றிற்குப் புறப்பட வேண்டிய இரயில் ஒன்பது இரண்டிற்குத் தான் பிளாட்பாரத்தில் வந்து நின்றது. இரயிலில் கூட்டமே இல்லை. அறை அறையாகத் தடுத்திருந்த குஷன் மெத்தை தைத்த சுத்தமான கம்பார்ட்மெண்ட்டுகளில் இஷ்டத்திற்கு அமருகிற போன்ற இடவசதி. இவை இரயிலின் சிறப்பம்சங்கள்.

ஒரு மணி ஒன்பது நிமிஷம் ஓடியதே தெரியவில்லை. டாக்டர் தாமோதரன் யோசனை கூறியிருந்தது போலச் சரியாகப் பத்துப் பன்னிரண்டுக்கு இருக்கையிலிருந்து



○ ஹைடில்பர்க் அச்சுக் கூடம்



○ மாணவர்கள் தாங்களே தங்கள் ரத்த அழுத்தத்தைப் பரிசோதித்துக் கொள்கிறார்கள்.

எழுந்து இரயிலின் கதவை நோக்கி நடந்தேன். இரயில் நின்றது. கீழே இறங்கி நிலையத்தின் பெயரைப் பார்த்தேன். ஹைடில்பர்க். பேராசிரியர் தாமோதரன் மலர்ந்த முகத்தோடு கைகூப்பி வரவேற்றபடி எதிரே வந்து கொண்டிருந்தார். நல்ல நிலா. மலைத்தொடரும், வீடுகளும், நடுவே வெள்ளி ஓடையாக மின்னிய நெக்கார் நதியும், மங்கலான ஓவியம் போல் தெரிந்தன. தாமோதரன் குடியிருந்த 'எப்பல் ஹெய்ம்' பகுதிக்குச் சென்று அவரது ஃப்ளாட்டை அடைந்தோம். அந்த ஃப்ளாட்டின் பால்கனி வழியே ஹைடில்பர்க்கைச் சூழ்ந்திருந்த பசுங்குன்றுகள் நிலவொளியில் மிக அழகாகத் தெரிந்தன. நேரம் போவது தெரியாமல் இரவு இரண்டு இரண்டரை மணிவரை பேசிக் கொண்டிருந்தோம்.

காலையில் பத்து மணிக்குப் பல்கலைக் கழகத்தில் தமிழிலக்கியத்தில் அங்கதச் சுவை பற்றிய கருத்தரங்கு. ஐந்தரை மணிக்கு எழுந்து எனது ஆங்கிலப் பேச்சைத் தயாரித்துக் கொண்டேன்.

மேற்கு ஜெர்மனியில் உள்ள பல்கலைக் கழகங்களிலேயே மிகமிகப் பழமையானது ஹைடில்பர்க் பல்கலைக் கழகம்தான். ஆறு நூற்றாண்டுகளாக எல்லாவிதக்கல்வித் துறைகளும் செழிக்கும் இப்பல்கலைக் கழகத்தின் புகழ் சர்வதேச அளவில் பரவியுள்ளது. பல்வேறு ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த மாணவர்களும் — அமெரிக்க மாணவர்களும் கூட இங்கே தேடி வந்து கற்கின்றனர்.

சில பெரிய பழமையான நகரங்களில் சர்வகலாசாலை ஓர் அங்கமாயிருக்கும். வேறு சில நகரங்களே சர்வகலாசாலை நகரங்களாயிருக்கும். சர்வகலாசாலையைக் கழித்து விட்டுப் பார்த்தால் அந்த நகரமே மீதமிருக்காது. ஹைடில்பர்க் அந்த வகையைச் சேர்ந்தது.

'ஹைடில்பர்க்' — என்ற புகழ்பெற்ற தரமான ஜெர்மன் அச்சுயந்திரம் பற்றி நாம் அறிவோம். இந்த நகரின் பெருமையான பெயரையே அ ஏற்றிருக்கிறது. ஹைடில்பர்க் அச்சுத் தொழில் கல்லூரி தனது வெள்ளிவிழாவைக் கொண்டாடி விட்டுப் பொன் விழாவை நோக்கி வெற்றி நடை போட்டுக் கொண்டிருக்கிறது.

'ஹைடில்பர்க்' போல் புராதனமான இல்லை என்றாலும் சமீபத்தில் பதினைந்து முதல் பதினெட்டு ஆண்டுகளுக்குள் மட்டும் மேற்கு ஜெர்மனியில் சுமார் 20 புதிய பல்கலைக் கழகங்கள் தோன்றியுள்ளன. இவற்றில் முன்ஸ்டர் பல்கலைக் கழகம் குறிப்பிடத்தக்கது. நவீன வசதிகள் நிறைந்தது.

ஹைடில்பர்க் கல்வி நிலையங்களில் பல்கலைக் கழக மட்டத்திற்கு வருமுன்பே, மாணவ, மாணவிகள் நவீன அறிவு வளர்ச்சி துறைகளில் விஞ்சி நிற்கின்றனர். வகுப்பறைகளில் கருவிகளைக் கொண்டு தத்தம் இரத்த அழுத்தத்தைத் தாமே பரிசோதித்துக் கொள்ளும் பள்ளி மாணவர்களைக் கண்டு வியப்பு ஓய்வதற்கு வெகு நேரமாகிறது.

ஹைடில்பர்க் பல்கலைக்கழகத்தில் தமிழ் மொழி உள்ளிட்ட தென்கிழக்காசிய மொழிகளை ஆராயும் நிலையம் 1962–ல் தான் தோன்றியது. பேராசிரியர் தாமோதரன் இதில் தான் பணிபுரிகிறார். 'தென்கிழக்கு ஆசிய மொழிகளின் இலக்கியங்களில் அங்கதம்' என்ற கருத்தரங்கை நான் போன சமயம் தொடர்ந்து சில வாரங்களாக நடத்திக் கொண்டிருந்தார்கள். நான் தமிழ் இலக்கியத்தில் அங்கதம் பற்றிய ஆங்கிலக் கட்டுரையைப் படித்த பின் கேள்விகள் சர்ச்சைகள் எல்லாம் நடந்தன. பின்பு ஜெர்மன் ஆராய்ச்சி மாணவர் ஒருவர் மராத்தியிலுள்ள ஏகநாதரின் படைப்புகளில் 'அங்கதம்' என்பது பற்றிக் கட்டுரை படித்தார். இரண்டு கட்டுரைகளுக்கும் டாக்டர். டெப்பெர்ட் என்ற பேராசிரியர் தலைமைவகித்து நடத்தினார். அப்புறம் பல்கலைக் கழகத்தின் சில பகுதிகளைச் சுற்றிப் பார்த்தோம். அந்தப் பல்கலைக் கழகம், அதன் அழகிய சூழல், புல்வெளிகள், கட்டிடங்கள், தோட்டங்கள், நெக்கார் நதி எல்லாமாகச் சேர்ந்து மறுபடி மாணவனாகி அங்கே படிக்க நேரக் கூடாதா என்ற தாகத்தையும் தவிப்பையும் என்னுள் ஏற்படுத்தின.

ஹைடில்பர்க்கின் அமைதியை, அழகை— இயற்கை வசீகரத்தை மனத்தில் இருத்திக் கொண்டு தாமோதரன் வீட்டில் பகலுணவு முடிந்த பின் மூன்று மணிக்கு அங்கிருந்து புறப்பட்டு 4 மணி 9 நிமிஷங்களுக்கு மறுபடி ஸ்டுட்கார்ட் வந்து சேர்ந்தேன்.

ஸ்டேஷனிலிருந்து கூப்பிடு தூரத்திலிருந்த ஹோட்டலுக்கு நடந்தே போய்ச் சேர்ந்தேன். வெளியே ஏதோ பண்ணையைச் சுற்றிப் பார்க்கப் போயிருந்த எங்கள் குழுவினர் இன்னும் திரும்பவில்லை என்று தெரிந்தது. ஹோட்டல் அருகே இருந்த நடைபாதைக் கடைகள் வட்டாரத்தில் சுற்றினேன். 'நடைப்பாதைக் கடை' என்றால் நம்மூர் போல் வழிமறிச்சான் கடைகள் இல்லை. வாகனங்கள் போகாமல் பயணிகள் நடந்தே மட்டும் செல்லக்கூடிய கடைப் பகுதிகளுக்குத் தான் அங்கு அப்படிப் பெயர் வழங்கியது. (தொடரும்)

---

தயாரிப்பாளர்: ரிலீஸாகப் போகிற என் புதுப் படத்தின் விளம்பரச் செலவு மட்டும் அஞ்சு லட்சம்!

நண்பர்: அடேயப்பா! அந்த அளவுக்கு மோசமான படமா?

—அ. தெய்வசிகாமணி.



# அழுகைக் காட்சியில் சிறந்தவர்

○ ப. பழனி, சென்னை–43.

? மார்கழி மாத குளிரில் அதிகாலையில் விழிப்பீர்களா?

! வெய்யிலோ, மழையோ, குளிரோ எது வானாலும் அதிகாலை நாலு மணிக்கே எழுந்து வேலைகளைக் கவனிப்பதால்தான் ஞாயிற்றுக்கிழமை ஒரு நாள், நேரம் கழித்து எழுந்திருப்பதன் சுகத்தை அனுபவிக்க முடிகிறது. அதுவும் வழக்கம் போல் நாலு மணிக்கு எழுந்த பிறகு இன்று ஞாயிற்றுக்கிழமை தானே என்ற நினைவு தரும் சுகத்துடன் குளிருக்கு அடக்கமாக இழுத்துப் போர்த்துக் கொண்டு படுக்கிற ஆனந்தம் இருக்கிறதே... அடடா!

○ எம். ஏ. பாஷா, சின்னசேலம்.

? கருளி தொகுதியை கவுண்டமணி, லூஸ்மோகன் எஸ். எஸ். சந்திரன் மூவரில் யார் கைப்பற்றுவர்?

! இன்னா பிரதர், இதுல என்னா டவுட் ஒனக்கு? நம்ப லூஸ்" கண்ணை மிட்டிக்கினு ஒரு அவாஸ் குட்தா சந்திரனும், கவுண்டமணியும் அம்பேல் உட்ருவாங்கப்பா. லூஸ்தான் செலிப்பாரு. அதுக்கோசரம் மத்தவங்க டெபாஸிட் பூடாதுப்பா!

○ கி. நரசிம்மன், திருவையாறு.

? ஓர் ஆங்கிலத் திரைப்படம், ஒரு சங்கீதக் கச்சேரி, வாரியார் சொற்பொழிவு மூன்றுக்கும் ஒரே சமயத்தில் அனுமதி கிடைத்தால் எதற்குப் போவீர்கள்?

! கதை சொல்பவர் வாரியார் என்று பெயரைக் குறிப்பிட்டவர் ஆங்கிலத் திரைப்படத்தின் தலைப்பையோ, அல்லது பாடகரின் பெயரையோ குறிப்பிடாததால் அவ்விரண்டிலும் 'ரிஸ்க்' இருக்கிறது. வாரியார் ஜேஸ்ப் பெட்.

○ இளஞ்சேரன், கோபி.

? சினிமாப் பாடல்களை வானொலி டி. வி. யில் ஒலிபரப்பக் கூடாது என்று தேர்தல் கமிஷன் தடை நியாயமா?

! நியாயமே. சில சினிமாப்பாடல் காட்சிகளை டி. வி.யில் பார்க்கும் போது அடடா, இவர்களும் தேர்தலில் நின்றிருக்கக் கூடாதா என்று ஏங்க வைக்கின்றனர்.

○ வண்ணை கணேசன், சென்னை.

? சமீபத்தில் நான் சகித்துக் கொண்டு பார்த்த படம் ஆத்தோர ஆத்தா... தாங்கள்?

! தலைவலியிலிருந்து தப்பித் திருகுவலியில் சிக்கியது போல் ஆத்தோர ஆத்தாவிலிருந்து தப்பி ஆயிரம் கைகளில் அகப்பட்டுக் கொண்டேன்.

○ ஜெயவசந்தன், கோவை.

? எஸ். டி. எஸ்.ஸின் தராசுக்கும் உங்கள் தராசுக்கும் வேறுபாடு?



○ ஜேஸ்ப் பெட்



○ வித்தியாச தராசு



○ ஆபரேஷன் வெற்றி



○ கருளி தொகுதி

! என்னிடம் டெபாஸிட் ஜிவக்ரமெல்லாம் கிடையாது.

○ என். பி. செந்தில் தேவராஜ், திருப்பூர்.

? கமல், ரஜினி ஆகிய இருவருள் அழுகைக்காட்சியில் சிறந்து நடிப்பவர் யார்?

! லேசாய் மூக்கை விரித்து, கண்ணில் நீர் வரட்டுமா வேண்டாமா எனக் கேட்கையில் குரல் கம்மப் பேசி அழும் கமல்—கண்ணீர் கொப்புளிக்க முகத்தைப் பிசைந்து கொண்டு வார்த்தைகள் தட்டுத் தடுமாறி வெளிவர அழும் ரஜினி — முன்னது அழகென்றால் பின்னது ஆழம்.

○ த. சத்தியநாராயணன், அயனாவரம்.

? டி. வி. கண்டுபிடிக்கப்படாமல் இருந்திருந்தால்...?

! ஆளும் கட்சிக்கு ஓர் ஓ. சி. பிரசார சாதனம் இல்லாமல் போய்விடும்.

○ என். விக்னேஷ், சிதம்பரம்.

? டில்லி டெஸ்ட்டில் இந்திய அணியின் தோல்விக்குக் காரணம்?

! கட்டை போடாதது.

○ ஹரிஹரன், சாத்தனூர். ★

? பெருவாரியாக இப்போது பயன்படுகிற பாமாயில் எண்ணெயில் என்ன சத்து உள்ளது? எங்கிருந்து எப்படித் தயார் செய்யப்படுகிறது?

தென்னைக் குடும்பத்தைச் சேர்ந்ததுதான் இந்த மரம். விஞ்ஞானப் பெயர் எலயிஸ் குவினீன்ஸிஸ். தாவர எண்ணெய் என்று எடுத்துக் கொண்டால் இதற்கு அப்புறம் தான் மற்றதெல்லாம். கண்டு முதலில். ஒரு ஹெக்டேரில் எட்டு டன் எண்ணெய் கிடைக்கும். விதைகள் நட்டு வளர்க்கப்படும் இந்த மரம் குட்டையானது. ஐந்தாவதுஆண்டிலிருந்து பழம் தரும். ஆனால் ஏழாம் ஆண்டிலிருந்து தான் மகசூல் அதிகம். சிவந்து கோவைக்கனி போல் இருக்கும். இந்தியாவில் பத்தாண்டுகளுக்கு முன்னர் தான் வந்து சேர்ந்தது இந்தத் தாவரம். ஆயில் பாம் இண்டியா என்ற அரசு நிறுவனம் கேரளத்தில் 4000 ஹெக்டேரில் பயிரிடுகிறது. பாமாயில் எண்ணெயில் கொலஸ்ட்ரால் உருவாக்கும் சத்து அதிகம் என்கின்றனர். கொலஸ்ட்ரால் தான் ரத்த நாளங்களில் கசண்டு போல் உருவாகி அடைத்துக்கொண்டு ஹார்ட் அட்டாக் மற்றும் பக்கவாதம் முதலியவற்றுக்குக் காரணமாகிறது. இந்தச் சத்துசூரியகாந்தி எண்ணெயில்(ஸனோலா) மிகவும் குறைவு. உடலால் உழைத்துச் சம்பாதிப்பவர்கள் மலிவான பாமாயில் வாங்கி உபயோகிக்கலாம். அவர்களுக்கு கொலஸ்ட்ரால் உருவாகும் வாய்ப்பு குறைவு. அது சரி, சூரியகாந்தி எண்ணெய் அறிமுகமான போது அத்தனை மலிவாயிருந்ததே இப்போது இத்தனை விலை விற்கிறதே என்று விசாரித்த போது தெரிய வந்தது: சூரியகாந்தி எண்ணெய் கலப்படம் பண்ண வசதியானதாம். எந்த எண்ணெயோடும் கலப்படமாய்ச் சேருமாம்! அதனால் கிராக்கி ஏற்பட்டு விலை ஏறிவிட்டதாம்!



○ ஜிவுஜிவு

○ எஸ். ரமேஷ், மதுரை.

? கட்சித் தாவல்கள் இந்தியாவில் மட்டும்தானா? அல்லது வெளிநாடுகளிலும் பிரசித்தமா?

! நமக்கே உரிய தனிப்பெரும் சிறப்பு என்று கூறிக் கொள்ள இந்த ஒன்றேனும் இருக்கிறதே என்று மகிழ்வதை விட்டுவிட்டு இதற்கும் அயல் நாடுகளுக்கே பெருமை தேடித் தரப் பார்க்கிறீரே! நியாயமா? படிப்பறிவில்லாத பாமர மக்கள் மிகுதியான நமது தேசத்தில் தான் ஜனநாயகத்தின் பெயரால் இத்தகைய தில்லுமுல்லுகள் நடக்க முடியும்.

○ வி. சௌரிராஜன், ஸ்ரீரங்கம்.

? பிரதமர் ராஜீவ் மூத்த அரசியல் வாதிகளை மதிக்கவில்லை என்பது உண்மையா?

! முழுப் பொய். இந்திராகாந்தி பெயரைச் சொல்லித்தானே அவருக்கு வோட்டுப் பெறப்பட்டது.

○ அ. அன்பழகன், அந்தணப்பேட்டை.

? அரசியல்வாதிகள் குட்டிக்கதை சொல்லி வோட்டு கேட்கிறார்களே... நீங்களும் ஒரு "குட்டி" கதை சொல்லுங்களேன்...?

! 'க்' கன்னாவை நழுவ விட்டதோடு குட்டிக்கு இரு பக்கமும் " " வேறு போட்டிருக்கிறீர்கள். தலையைக் குட்டிக் கொண்டு யோசித்தால் கூட அத்தகைய கதை ஒன்றும் என்னிடம் தேராது. ஸாரி.

○ மது ஜெயபால், அத்திமலைப்பட்டு.

? எம். ஜி. ஆரின் ஆபரேஷன் தான் வெற்றிகரமாக முடிந்து விட்டதே இப்பவாவது கடவுள் அவர் பக்கம் இருப்பதை நம்புகிறீரா?

! எப்பவாவது கடவுள் அவர் பக்கம் இல்லை என்று நான் நினைத்திருந்தாலல்லவா இந்தப் பிரச்சினை. எப்பவுமே கடவுள் அவர் பக்கம்தான். நம்புகிறேன் நம்பினேன், நம்புவேன்.

○ மதிவாணன், அரூர்.

? பாக்கியராஜ் தேர்தல் பிரசாரம், ராஜேந்தர் தேர்தல் பிரசாரம் ஒப்பிடுக:

! பாக்கியராஜ் — ராஜேந்தர்
கலகல — கரகர
ஜிலுஜிலு — ஜிவுஜிவு
கிசுகிசு — கிடுகிடு

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
ஹரிஹரன்,
சாத்தனூர்.
609 802.



○ ஜிலுஜிலு ○ ஆழமான அழுகை

# கமலா ரஜினியா ?

## பார்த்ததும் கேட்டதும்

# சிறைப்படாமல் சிறந்த நடிப்பு



○ லட்சுமி

### பார்த்தது

ஏ. வி. எம். ஸ்டுடியோவின் நான்காவது ஃப்ளோரில் கோவில் சன்னதி மாதிரி ஒரு செட்.

பாபுவின் ஒளிப்பதிவில் 'ராஜா யுவ ராஜா' படப்பிடிப்பு.

டைரக்டர் சோமு, குருக்கள் வேஷத்தில் இருந்த தியாகராஜனுக்குக் காட்சியை விளக்கி, எடுக்கப் போகும் ஷாட்டிற்கு என்ன மாதிரி ஆக்ஷன் வேண்டும் என்பதைச் சொல்லிக் கொண்டிருந்தார்.

அதாவது ஒரிஜினல் குருக்களுக்குப் பதிலாக, குருக்கள் வேஷத்தில் கொள்ளைக்கார தியாகு வந்து அம்மனுக்கு ஆராதனை செய்கிறார். பக்தர்கள் கண் மூடி, அம்மனைத் தியானித்துக் கொண்டிருக்கும் சமயத்தில், அம்மனின் நகைகளைக் களவாடிக்கொண்டு போய்விடுகிறது, கொள்ளைக்காரக் கும்பல்.

ஹைதர் அலி காலத்திலிருந்து தமிழ் சினிமாவில் தொடர்ந்து இடம் பெறுகிற காட்சிதானே. இனியாவது நம்மவர்கள் சொஞ்சம் புதுசாய்ச் சிந்திக்க முயற்சியாவது பண்ணலாமே...? என்று நினைத்துக் கொண்டிருக்கையில் செந்தாமரை வந்தார்.

படப்பிடிப்புக் குழு பக்கத்து செட்டிற்கு நகர்ந்தது.

கொள்ளையர் தலைவனான செந்தாமரை ஸ்டைலாக நடந்து வந்து, தியாகராஜனிடம் ஒரு திட்டத்தைச் சொல்கிறார்: "நாளை இரவு பாண்டியன் எக்ஸ்பிரஸில் இரண்டு பேர் வைரத்துடன் வருகிறார்கள். அவர்களை மடக்கி வைரத்தைக் கொண்டு வரவேண்டும்" – இது வசனம்.

செந்தாமரை வசனத்தைக் கேட்டுக் கொண்டு தனியாகப் போய் இரண்டுமுறை பேசிப் பார்த்துக் கொண்டார்.

செந்தாமரை வரும்போது, தியாகராஜனும் மற்றவர்களும் அவர் எதிரில் வந்து நிற்க வேண்டிய பொஸிஷனைச் சொல்லிக் கொடுத்தார், டைரக்டர் சோமு.

"என்னய்யா இந்த காஸ்ட்யூம், எங்காவது குப்பைக் குழியில் போட்டு வைத்திருந்தீர்களா...? இவ்வளவு 'சுத்த'மாக இருக்கிறது!" என்று யாரையோ கடிந்து கொண்டு விட்டு "சரி, சரி, போய்க் காப்பி கொண்டு வா!" என்று ஒரு பையனை விரட்டினார், தியாகராஜன்.

பாபு, லைட்டிங்கில் பிஸியாக இருந்தார். அதற்குள், வந்திருந்த நான்கைந்து இளம் பத்திரிகையாளர்களோடு தியாகராஜன் போய், பேசிக் கொண்டிருந்தார்.

அடுத்த ஒருசில விநாடிகளில் கேமிரா மேன், டைரக்டர், ஹீரோ எல்லோரும் பத்திரிகைப் புகைப்படக்காரருக்கு 'போஸ்' கொடுக்க ஆரம்பித்து விட்டார்கள்.

சரி, அடுத்த ஷாட் இப்போதைக்குத் துவங்காது என்றெண்ணி இடத்தை விட்டு அகன்றேன்.

○ தியாகராஜன்



## கேட்டது:

ஒரு நீண்ட இடைவெளிக்குப் பிறகு, 'சிறை' படத்தின் மூலம், மீண்டும் ரசிகர்களின் நெஞ்சங்களை ஆக்கிரமித்திருக்கிறார் லட்சுமி.

'சிறை' வெளிவருவதற்கு ஒரு வாரத்திற்கு முன்பாக அவரைச் சந்தித்த போது—

''ரொம்ப நாளைக்கப்புறம் இந்தப் படத்தில் தான் எனக்கு ஒரு நல்ல கேரக்டர் கிடைத்திருக்கிறது. அநேகமா 'சிலநேரங்களில் சில மனிதர்க'ளுக்குப் பிறகு இந்தப் படத்தில் நான் செய்திருக்கிற பர்ஃபாமென்ஸ்தான் எனக்குத் திருப்தி தந்திருக்கிறது.

''ஒரு காட்சியில் நான் கதறி அழ வேண்டும். கேரக்டரோடு இன்வால்வ் ஆகிப் போனதால், டைரக்டர் சக்தி 'கட்' சொன்ன பிறகும் நான் அழுதுகொண்டே இருந்தேன். இந்தப் படத்தில், அந்தக் கேரக்டரில் நடிக்க சக்தி என்னைத் தேர்ந்தெடுத்ததற்கு, அவருக்கு நான் நிறைய நன்றிக் கடன் செலுத்தணும்!'' என்றார்.

''சில நேரங்களில் சில மனிதர்களுக்காக சிறந்த நடிகைன்னு அவார்டு வாங்கினீங்க... அந்த வகையிலே சிறந்த நடிப்பை வெளிப்படுத்தற டெக்னிக்கைப் பத்தி கொஞ்சம் சொல்லுங்களேன்...''

ஒருமுறை சிரித்துவிட்டு, ''நான் என் வரைக்கும் தான் சொல்ல முடியும். நான் எப்படி நடிக்கிறேன்; எப்படி ஒரு பாத்திரமாகவே மாற முயற்சி பண்றேன்... அப்படின்னு வேணுமானா சொல்லலாம்'' என்றார். ''இமாஜின் பண்ணிக்கறது தான் ஜெனரல் தியரி ஆஃப் ஆக்டிங். அதுக்காக முழுக்க இமாஜின் பண்ணிடறதாலேயே ஆக்டிங் வந்துடும்னு சொல்லலே. மென்டல் டார்ச்சர், செல்ஃப் சிம்பதி, இமாஜின் அன்ட் பிராக்டிஸ்—இத்தனை திறமையும் வேணும்.

''க்ளாப் அடிச்சஉடனேயே ஆக்டிங் வந்துடாது. அதுக்கு முன்னாலே, நம்மை அந்த 'மூடுக்கு' கொண்டுவந்து, ஸம் மினிட்ஸ் அந்த கேரக்டரைத் துல்லியமா மனத்திலே உணர்ந்து — டன்னுவேன். இதெல்லாம் ஹெவி கேரக்டர்ஸ் பண்ணும் போதுதான். லைட் ரோல்களுக்குப் பொதுவா இவ்வளவு சிரமம் தேவை இல்லே. நம்முடைய எக்ஸ்பீரியன்ஸைக் கொண்டு திருப்தியாப் பண்ணிடலாம்.

''இன்னொன்று — மெச்சூரிட்டி. நான் ஜீவனாம்சத்திலே அறிமுகமாகிறப்போ பதினைஞ்சு வயசு. சில நேரங்கள் கங்கா கேரக்டரை அந்த 15 வயசிலே என்னிடம் செய்யக் கொடுத்திருந்தால், எனக்கு எவ்வளவு தான் நடிப்புத்திறமை இருந்தாலும் — இந்த பர்ஃபாமென்ஸைக் கொடுத்திருக்க முடியாது. காரணம் — ஹஸ்பெண்ட் — வைஃப், அல்லது அதுமாதிரியான ஒரு ரிலேஷன்ஷிப்பிற்கிடையே உள்ள உணர்வுகள் போன்றவற்றை அந்த வயசிலே நிச்சயமாப் புரிந்து கொள்ள முடியாது. அதனால் அது — நடிப்பிலேயும் வெளிப்படாது. அதனாலே தான் ஆக்டிங்கிற்கு மெச்சூரிட்டியும் அவசியம். அது இல்லேன்னா, பல கேரக்டர்களை நம்மால பண்ண முடியாது.''

''இப்போ வர்ற பல புதுமுகங்களை ரொம்பப் பேர் லாங் ஸ்டாண்டிங்கா நிற்கிறதில்லே. அதுவும் குறிப்பாப் புது ஹீரோக்கள், கொஞ்ச நாள்லே அட்ரஸ் இல்லாம போயிடறாங்களே...?''

''அதுக்குக் காரணம் உங்களுக்கே தெரியும். முன்னே, சினிமாத் துறைக்கு வந்த பல நடிகர்கள் நாடக மேடையிலிருந்து வந்தார்கள். அல்லது ரொம்பக் கஷ்டப்பட்டு சின்னச்சின்ன வேடங்கள்லே தலைகாட்டி, கொஞ்ச கொஞ்சமா வளர்ந்து ஹீரோ ஸ்டேஜுக்கு வந்தாங்க. சாகிற வரைக்கும் நமக்கு நடிப்புதான் தொழில்னு அதிலேயே கவனமா இருந்தாங்க. இந்தத் துறையிலே இன்னும் இன்னும் பெயரும் புகழும் பெறணும்கற ஆவல் இருந்தது. உழைப்பு இருந்தது. இப்போ...

''முதல் படம் ஓகோன்னு ஓடிட்டா... உடனே அந்த நடிகரை நோக்கி எல்லாப் புரொடியூசர்களும் ஓடுகிறார்கள். அந்த நடிகர்களும், தலைகால் புரியாம ஒரு குருட்டு அதிர்ஷ்டமா நினைத்து, 'ரேட்'டை உயர்த்தி விடுகிறார்கள்.

''ஒரு ஷார்ட் பீரியட்லே முடிஞ்ச வரைக்கும் பணம் பண்ணிட்டு, அப்புறம் நிம்மதியா வேற பிஸினஸ்லே இறங்கிடலாம்னு நினைக்கிறாங்க.

''அப்புறம் எப்படி அவர்களிடமிருந்து நடிப்பையும், சின்சியரிட்டியையும் எதிர்பார்க்க முடியும்? அவர்களே லாங் பீரியட் நிற்கணும்னு எதிர்பார்க்கலே; நிற்கலே! அவ்வளவுதான்!''

-சம்பத்ஜி



### இவர் திருமணத்தை மறந்தவர்!

அன்று, அந்த விஞ்ஞானிக்குத் திருமணம். மணநேரம் நெருங்கியும் மணமகன் வராததால், தேடி வர ஆட்களை அனுப்பினர். அகப்படவில்லை.

ஒரு யோசனை தோன்றியது, மணமகளின் தகப்பனாருக்கு. ஆராய்ச்சி சாலைக்கு ஒரு ஆளை அனுப்பிப் பார்க்கச் செய்தார். அவர் நினைத்த மாதிரியே மணமகன் தம்மை மறந்து ஆய்வில் ஈடுபட்டிருந்தார்! அந்த விஞ்ஞானி லூயி பாஸ்டர்!

—புதுவை நித்திலன்.





○ பெரோஸ் - இந்திரா

## 7

பிரம்மாண்டமான கட்டிடம். பெரிய தோட்டம். புல் தரை. பூச் செடிகள். நிழல் மரங்கள். நீரூற்று. பிரதம மந்திரியின் இல்லம் பிரமாதமாகத் தோன்றியது, வெளியில் இருந்து பார்க்கும்போது.

உள்ளே நீள் சதுரத்தில் அறைகள். நீண்ட வராந்தாக்கள். அநேகமாக அறை ஒவ்வொன்றிலும் நாலு வாசல்கள். அகன்ற ஜன்னல்கள். 'பிரைவஸி' என்பது துளிக் கூடக் கிடையாது. குடித்தனம் நடத்துவது கொஞ்சம் சிரமம்.

இந்திராவிற்குச் 'சப்'பென்று போய்விட்டது. இது புது தில்லியிலேயே புகழ் பெற்ற வீடு. பிரிட்டிஷ் அரசாங்கம் தன் பிரதம தளபதிக்குக் கொடுத்திருந்த வீடு. எதிர்த்தாற்போல் ராஷ்டிரபதி பவன். சற்றுத்தள்ளி பார்லிமெண்ட். அடுத்த தெருவில் காந்திஜி. அப்பாவின் ஆபீசிற்கும் பக்கம்தான்.

என்றாலும் குடியிருக்க வேண்டுமானால் ஏகப்பட்ட மாறுதல்கள் செய்ய வேண்டும். அநாவசிய வாசல்களை அடைக்க வேண்டும். அதே சமயம் ஆங்கிலேயன் அழகு சேர்க்க ஏற்படுத்திய 'சிமிட்ரி' (ஒழுங்கு) கெடக் கூடாது. நீளக் காரிடார்களால் பிரயோசனமில்லை. வீட்டிற்குள் நடக்க இத்தனை இடம் அதிகம். அப்பாவுடைய லைப்ரரியை அங்கே நுழைத்து விடலாம். முதலில் சுவரில் இருக்கிற படங்களை எல்லாம் அகற்ற வேண்டும். அப்பா, எத்தனை பெரிய படங்கள்! ஆளுயரத்திற்கு வரைந்த அற்புதமான படங்கள். ஒவ்வொன்றிலும் மார்பில் பதக்கம் மின்ன இடுப்பில் கத்தி தொங்க வெள்ளைக்கார ஜெனரல்கள். முறைத்த பார்வை. முறுக்கிய மீசை. சிரிப்பு என்பது என்னவென்றே தெரியாத முகங்கள். அவசர அவசரமாய் உள்ளே நுழைந்து சட்டென்று நிமிர்ந்து பார்த்தால் ஆள் நிற்பது மாதிரி இருக்கும். 'ஏய்!' என்று அதட்டுகிற குரல் பிரமையில் தட்டும்.

தீன் மூர்த்தி பவனில் குடியேறியதும் இந்திரா முதலில் செய்த வேலை, அத்தனை ஜெனரல்களையும் கழற்றிப் பாதுகாப்பு அமைச்சகத்திற்கு, அனுப்பியது தான். பெண்களுக்கே உரிய உள்ளுணர்வோடு வீட்டைப் பராமரிப்பதில் இறங்கினார் இந்திரா. ஒவ்வொரு பல்பும் எரிகிறதா, பிளக்கும் வேலை செய்கிறதாவிலிருந்து, வீட்டிற்கு வருகிற வெளிநாட்டுப் பிரமுகருக்கு என்ன பரிசு கொடுப்பது என்பது வரை அவருடைய பொறுப்பாக இருந்தது. நெட்டை மனிதர்களுக்கு முதுகுயர்ந்த நாற்காலி. குள்ளர்கள் கால் வைத்துக் கொள்ள புட் ரெஸ்ட். மாட்டுக் கறி சாப்பிடாத இந்துக்கள், பன்றிக் கறி சாப்பிடாத முஸ்லிம்கள், நான்வெஜிடேரியன்தான், ஆனால் செவ்வாய் சனி விரதம். முட்டை சாப்பிடுவார்கள், ஆனால் சைவம். மீன் சாப்பிடுகிற வங்காளிகள், மிகப் பெருமையாக வெஜி

# மணவாழ்க்கையில் விரிசல்

# இந்தியாவின் இந்திரா

டேரியன் என்பார்கள்! நடுப்பகல் பன்னிரண்டுக்கு மேல் சொட்டுத் தண்ணீர் கூடக் குடிக்காத புத்த பிஷுக்கள்! விருந்தினர்களில் எத்தனை விதம்!

ஒருபுறம் வீட்டை ஒழுங்கு படுத்துவதில் வெகு கவனமாய் முனைந்திருந்தார் இந்திரா. மறுபுறம் மண வாழ்க்கை வேகமாக இற்றுக் கொண்டிருந்தது. லக்னோவில் ஏற்பட்ட விரிசல், டில்லியில் இடைவெளியாய்ப் பெருகியது. வீட்டோடு இருக்க மறுத்த மாப்பிள்ளை எம். பி. ஆனார். அவருக்குத் டில்லியில் ஒரு வீடு கொடுக்கப்பட்டது. நேருவின் நிழலில் ஒண்டாமல் சுதந்திர மனிதனாய் இருக்க விருப்பம் கொண்டவர் என்பதைப் புரிந்து கொண்ட விஷமிகள், பெரோஸைச் சீண்டினார்கள். இந்திரா மீது காழ்ப்புக் கொண்ட உறவினர்கள் இடைவெளியை மிகுதியாக்கினார்கள்.

''உனக்கென்னப்பா! பிரதமர் வீட்டு மாப்பிள்ளை!''

''பிரதமர் வீட்டு மாப்பிள்ளை, தேசத்திற்கே மாப்பிள்ளையாச்சே!''

நண்பர்கள் கூட்டம் கலகலவென்று நகைக்கும்.

''இவரைத் தெரியுமா உங்களுக்கு? இந்திராவின் — அதான் நேருவின் பெண் — ஹஸ்பெண்ட்'' என்று அறிமுகங்கள் நடக்கும்.

தீன்மூர்த்தி பவனத்தில் தன் முழுக்கவனத்தையும் இந்திரா காண்பித்த நேரத்தில், தனது எம். பி. குவார்ட்டர்ஸைத் தன் ரசனைக்கேற்ப அலங்கரிப்பதில் ஆர்வம் காண்பித்தார் பெரோஸ். வீட்டிற்கு முன்னால் சின்னதாய், ஆனால் அழகாய்த் தோட்டம் போட்டார். பளிர் என்ற வண்ணத்தில் பூக்கும் செடிகளை நட்டார். நாலு பேர் போட்டு உட்கார்ந்து பேசுகிற அளவுக்குச் சிறிதாய்ப் புல்வளர்த்தார். தீன் மூர்த்தி பவனத்திற்கு வருவார். சிறிது நேரம் தங்குவார். ஆனால், எழுத வேண்டும் என்று தோன்றினாலோ, நண்பர்களைச் சந்திப்பதென்றாலோ எம். பி. குவார்ட்டர்ஸ் தான். அவரைப் பொறுத்த வரை அதுதான் ''அவருடைய'' வீடு.

குழந்தைகள் டேராடூனுக்குப் படிக்கப் போய்விட, இந்திராவைத் தான் போகிற இடத்திற்கெல்லாம் அழைத்துப் போனார் நேரு. பதினேழு வருடங்களில் இருபத்திநாலு முறை நேருவுடன் அயல்நாடுகளுக்குப் போயிருக்கிறார் இந்திரா. இது தவிர உள்நாட்டுச் சுற்றுப்பயணங்கள். 1952 தேர்தல் சமயம். பிரசாரத்திற்காக ஊர் ஊராய்ப் போய்க் கொண்டிருந்தார் நேரு. ஏதோ ஒரு இடத்தில் 'கம்யூனிகேஷன் காப்'. ஒரே நேரத்தில் இரண்டு இடங்களில் கூட்டத்திற்கு ஏற்பாடாகிவிட்டது. இரண்டிற்கும் இடையில் நூறு மைல்கள். தன்னைப் பார்க்க வருகிற ஜனங்களை ஏமாற்றக் கூடாது என்பதில் நேருவிற்குப் பிடிவாதம். என்ன செய்வது?

மாலன்

''நீ போயேன் அந்தக் கூட்டத்திற்கு'' என்றார் இந்திராவிடம்.

''நானா? எனக்கு என்ன பேசத் தெரியும்?''

''ஆக்ஸ்போர்டில் படித்த பெண்! இந்தியா லீக் கூட்டங்களில் பேசியிருப்பாயே!''

இந்திரா பதில் சொல்லவில்லை. மனத்துக்குள் சிரித்துக் கொண்டார். இந்தியா லீக், இந்திய மாணவர்களுடைய சங்கம். உணர்ச்சிகரமான பேச்சாளர்களை உற்பத்தி பண்ணுகிற இடம். இந்திரா அதிகம் பேசியதில்லை. ஒருமுறை கூட்டத்திற்கு நன்றி சொல்கிற பொறுப்பு இந்திராவிடம் தரப்பட்டது. மேடை மீதேறி இரண்டு வார்த்தை வருவதற்குள் கையும், காலும் உதறின. நாக்குப் புரள மறுத்துச் சுருண்டது. கூடப்படித்த மாணவர்களில் பலர் உற்சாகமான பேச்சாளர்கள். பாரிஸ்டருக்குப் படித்துக்கொண்டிருக்கும் வக்கீல்கள். எந்த விஷயத்தையும் உண்டு இல்லை என்று கட்சி கட்டிக் கொண்டு விவாதிக்கிறார்கள். இவர்களுக்கு நடுவில் பேச்சு குழறுகிறது. ''என்ன பேசுகிறாயா, இல்லை முணுமுணுக்கிறாயா?'' என்று பின் பெஞ்சிலிருந்து ஒரு குரல் அதட்டுகிறது. அவ்வளவுதான். அப்படியே உட்கார்ந்து விட்டார் இந்திரா! அவரைத் தேர்தல் கூட்டத்தில் பேசச்சொல்கிறார் நேரு. அப்பா சொல்வதை மறுப்பதற்கில்லை.

அது ஆரம்பம். அடுத்தடுத்த வருடங்களில் அரசியலில் சற்றுத் தீவிரமாகக் கவனம் திரும்பியது. கணவனும் மனைவியும் சந்தித்துக் கொள்வது அரிதாயிற்று. இந்திரா செய்தித் தாள்களில் பேர் வருகிற நட்சத்திரம் ஆகிவிட்டார்.

ஈகோ பிரச்சினை என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. தம்மை ஒரு சுயேச்சை மனிதராகக் கருதி வந்த பெரோஸ், சுறுசுறுப்பாய்ச் செயல்படத் தொடங்கினார். பாராளுமன்றத்தில் அவர் பேச எழுகிற போதெல்லாம் தேசத்தின் கவனம் அவர் பக்கம் திரும்பியது. ஏற்கெனவே நல்ல பேச்சாளர். இடுக்கிடும் விஷயங்களைப் பேச ஆரம்பித்தார். ஒரு நேர்மையான பத்திரிகையாளருக்கே உரிய ஆர்வத்துடன் துருவித் துருவி விஷயங்களைச் சேகரித்தார். ராம் கிருஷ்ண டால்மியா இந்தியாவின் பெரிய பணக்காரர்களில் ஒருவர். காங்கிரஸ் ஆதரவாளர். நேருவின் நண்பர். இன்ஷூரன்ஸ் கம்பெனியை இரண்டு கோடி ரூபாய்க்கு ஏமாற்றி விட்டார் டால்மியா என்று பாராளுமன்றத்தில் முழங்கினார் பெரோஸ். டால்மியா சிறைக்குப் போனார். ஹரிதாஸ் முந்த்ரா மற்றொரு பணக்காரர். நிதி அமைச்சகம் அவருக்கு முறையற்ற சலுகைகள் காண்பிக்கிறது என்று பார்லிமெண்டில் ஆதாரங்களை வீசினார் பெரோஸ். தலைமை நீதிபதி சாக்ளா தலைமையில் கமிஷன் அமைந்தது. பெரோஸின் குற்றச் சாட்டுக்கள் உண்மை என்று நிரூபணமாகியது. நேருவின் நெருங்கிய நண்பர் டி.டி.கே.

நிதியமைச்சர் பதவியை ராஜினுமா செய்தார். மூந்தாரா. ஜெயிலுக்குப் போனுர். பல தலைகள் உருண்டன.

பரபரப்பான இந்த விஷயங்கள் பெரோசைப் புகழ்பெறச் செய்தன. எதிர்க் கட்சிகள் எதுவும் செய்யச் சக்தியற்று இருந்த நேரத்தில், காங்கிரஸ்காரரே அரசாங்கத்தைக் குற்றம் சாட்டியது. கட்சியைத் திடுக்கிட வைத்தது. சொல்லப்பட்ட விஷயங்களின் நேர்மை. கடுமையான நடவடிக்கைகள் எடுக்க முடியாமல் கையைக் கட்டிப்போட்டது. திருடனுக்குத் தேள் கொட்டிய நிலையில் கட்சி. தன்னுடைய மாப்பிள்ளையே தன் அரசாங்கத்தின் மீது குற்றம் சாட்டுவது கண்டு திகைத்துப் போனுர் நேரு. அரசாங்கத்தின் மீது சொல்லப்பட்ட குற்றத்தை அப்பா மீது சொல்லப்பட்ட குற்றமாகவே நினைத்தார் இந்திரா. நேருவின் நேர்மையையே பெரோஸ் சந்தேகிப்பதாக ஆத்திரப்பட்டார். விரிசல் பிளவாக மாறியது.

''எங்களை லட்சியத் தம்பதிகள் என்று சொல்ல முடியாது. நாங்கள் வெவ்வேறு எண்ணங்கள் கொண்ட இரண்டு வலிமையான தனி நபர்கள். என்றாலும் ஒருவர் மீது ஒருவர் ஆழ்ந்த அன்பு கொண்டிருந்தோம். நாங்கள் மகிழ்ச்சியாக இருந்த நாட்கள் உண்டு. கடுமையாகச் சண்டை போட்டுக் கொண்ட தருணங்கள் உண்டு. சூழ்நிலை தான் காரணம். ''வேண்டாம்'' என்று அவர் சொல்லியிருந்தால் நான் பொது வாழ்க்கைக்கே வந்திருக்கமாட்டேன். ''உன் னிஷ்டம்'' என்றதால் வந்தேன். எந்த ஒன்றில் ஈடுபட்டாலும் அதில் முழுமூச்சுடன் தீவிரமாக இறங்குவது என் சுபாவம். ஓர் ஆண் பிள்ளையின் ஈகோவைக் காயப் படுத்துவதுதான் மண வாழ்க்கையின் பெரிய பாபம்!'' என்று எழுதுகிறுர் இந்திரா.

பாராளுமன்றத்தில் புகழ் பெற ஆரம்பித்த பின்னர் கடுமையாக உழைக்க ஆரம்பித்தார் பெரோஸ். அவர் பேச எழுந்தாலே இன்று என்ன குண்டு வெடிக்குமோ என்று நடுக்கமும் ஆவலும் மிகுந்தன. அவருக்கென ஒரு நண்பர் குழு ஏற்பட்டது. அவர்களோடு கூட்டாகச் செயல்பட ஆலோசனை கலந்த மூலை இப்போதும் பாராளுமன்ற கட்டிடத்தில் 'காந்தி மூலை' என்று குறிக்கப் படுகிறது.

கடின உழைப்பு உடலை பலி கேட்டது. 1958–ல் ஹார்ட் அட்டாக் ஏற்பட்டு, நிலைமை மோசமாகியது. இந்தியாவின் முதல் கம்யூனிஸ்ட் அரசாங்கம் செயல்படுகிற விதத்தைக் கண்டறிய கேரளாவிற்கு வந்திருந்த இந்திராவிற்குத் தகவல்போயிற்று. அவருடைய வருகைக்காகவே காத்திருந்தது போல், அவருடைய கையைப் பற்றிக் கொண்டே காலமானுர் பெரோஸ்.

இந்திரா உடைந்து போனுர். அறைக் கதவைச் சாத்திக் கொண்டு தனிமையில் ஒருநாள் முழுதும் அழுதார்.

நேருவிற்கு இது இரண்டாவது அதிர்ச்சி. எட்டு வருடம் கழித்து, இந்தியா சீனுவிடம் தோற்றுப் போய், நம்பிக்கைத் துரோகத்தின் காரணமாக முதுகில் குத்தப்பட்ட மூன்ருவது அதிர்ச்சியில் போது நேருவும் இறந்து போனுர்.

முதலில் காந்தி, அடுத்தது பெரோஸ். அப்புறம் அப்பா. இந்திரா ஒவ்வொருவராகத் தம் மனிதர்களை இழந்தார். தனிமை சூழ்ந்தது.

(தொடரும்)

# இது இளைஞர் ஆண்டு

1985–ஆம் ஆண்டின் சிறந்த யுவன் அல்லது யுவதி என்று யாரைக் கருதுகிறீர்கள்? ஏன்? உங்களுக்கு நன்கு தெரிந்த 25–26 வயதுக்கு மேற்படாத ஒருவரைப் பற்றி அவரது விலாசமும் குறிப்பிட்டுக் கல்கியில் ஒரு பக்கத்துக்கு மேற்படாமல் புகைப்படத்துடன் எழுதுங்கள். சுவாரஸ்யமான இளைஞர், யுவதி பற்றி எழுதப்பட்ட ரசமான கட்டுரைகள் கல்கியில் பிரசுரமாகிப் பரிசு பெறும். உறையின் மேல் ''இளைஞர் ஆண்டு'' என்று குறிப்பிடுதல் அவசியம்.

புகைப்படங்கள், கட்டுரைகள், திருப்பி அனுப்புதல் கிடையாது. கடிதப் போக்குவரத்து இல்லை.

கல்கி வாசகர்களால் தேர்ந்தெடுக்கப்படும் இந்த இளைஞர்களுக்குப் பாராட்டிதழும் பரிசும் உண்டு.



# இதயம் கவர்ந்த இரும்பு குதிரைகள்

"இரும்பு குதிரையா? இரும்புக் குதிரையா?" — இதுதான் மிகப் பெரிய பிரச்னையாகி விட்டது "இரும்பு குதிரை" நூல் வெளியீட்டு விழாவில். ஒருவர் மாற்றி ஒருவர் பேச்சாளர்கள் எல்லோருமே 'க்' கைப் பிடித்துக் கொண்டு ஒரு உலுக்கு உலுக்கினர்.

வானதி திருநாவுக்கரசு வரவேற்பில் தெரியவந்த விஷயம்: வானதி வாரம் ஒரு நூல் வெளியிடுகிறது. சராசரியில் ஓராண்டில் 52 புத்தகங்கள்!

"ஒரு படப்பிடிப்புப் போல் இரும்புக் குதிரை திகழ்கிறது" என்றார் அவ்வை. பக்கத்தில் கமலும், ஏ. வி. எம். சரவணனும் அமர்ந்திருந்தார்கள். "நாவலைப் படித்த பிறகு அதனால் உந்தப்பட்டு அதன் நிலைக்களன் பகுதிகளைப் (பார்பர்ஸ் பிரிட்ஜ் பக்கம்) போய்ப் பார்த்து வந்தேன்" என்றார் அவ்வைநடராஜன். அந்த அளவுக்கு ஒருவரை நாவல் "இயக்கி"யிருக்கிறது என்பதே வெற்றிதானே!

குறிப்பாக நாவலில் இழையோடும் ஒரு கவிதையைப் பற்றிச் சொன்னார் அவ்வை: "அது கதையுடன் இழைந்த ஒரு கற்பனைக் காவியம்!"

அதென்னமோ தெரியவில்லை, நூல் வெளியீட்டு விழா என்றால் ஏ. வி. எம். சரவணனுக்குத் தான் ஏக கிராக்கி! ராசியான கையாம் அவருடையது. முதல் பிரதியைப் பெற்றுக் கொண்ட கையோடு கம்பி நீட்டாமல் காசு கொடுத்து வாங்கிக் கொள்வதை (சில சமயம் குறிப்பிட்ட விலையை விட அதிகமாகவே கொடுத்து) வழக்கமாகக் கொண்டிருக்கிறார் சரவணன்.

'க்' விட்டுப் போனதற்குப் பாலகுமாரன் கூறும் காரணமாகக் கமல் சொன்னது: "குதிரையின் ஓட்டத்துக்கு, வேகத்துக்கு 'க்' தடையாக நிற்கிறது."

"என்னைப் போன்ற வீடியோ அடிமையிடம் புத்தகத்தைத் தந்தால் படிப்பது எங்கே? ஆனால் பாலகுமாரனின் இந்தப் புத்தகத்தைக் கீழே வைக்க மனமின்றி ரசித்துப் படித்து விட்டேன்" என்றார் கமல். தொடர்ந்து சினிமாவை நால்வகைப்படுத்தினார்: (1) நல்ல படம், (2) கெட்ட படம், (3) ஓடும் படம், (4) ஓடாத படம்!

"பாலகுமாரனைப் போன்ற இலக்கிய கர்த்தாக்களையும் திரையுலகம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்" என்ற சிபாரிசுடன் முடித்தார் கமல்.

மு. மேத்தாவும், வைரமுத்துவும் இரும்புக் குதிரையில் காந்தமான மனத்துடன் லயித்துக் கதையையும், கதாபாத்திரங்களின் சிறப்பியல்புகளையும் பாராட்டிப் பேசினார்கள்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முற்பட்ட ஓர் அனுபவத்தைக் கூறினார் வைரமுத்து:

"தலைப்புத் தருகிறோம்; கவிதை எழுத வேண்டும்" என்றார் வானொலி இயக்குனர். "நாங்கள் எழுதிய கவிதைக்குத் தலைப்புத் தருவோமேயன்றி உங்கள் தலைப்புக்குக் கவிதை எழுதுவதென்பது இழுக்கு" என்று படபடத்துவிட்டு வெளியேறிவிட்டார் பாலகுமாரன். "பாலகுமாரன் இன்றைக்கும் இளைஞர் தான்; ஆனால் கோபகுமாரன் இல்லை, சாந்த குமாரன்!" என்று அவர் மனம் பக்குவமடைந்திருப்பதை விளக்கினார் வைரமுத்து.

புத்தகத்தின் அருமை பெருமைகளை எடுத்துச் சொன்ன மாலன் நூலுக்கு முன்னுரையும் வழங்கியிருக்கிறார். அனுபவங்கள் எப்படி நாவல் வடிவம் பெறுகின்றன என்று சித்திரிப்பதாக அமைந்துள்ள முன்னுரையின் கடைசி வரிகள்: "ஒரு சுடரை ஏற்றியிருக்கிறாய் நீ! உனக்குள்ளே ஆகுதி சொரிந்த. காலங்காலமாய் வளர்த்த யாகத் தீயில் ஏற்றிய சுடர். இதற்காக ஒரு தலைமுறை உனக்குக் கடமைப்பட்டிருக்கிறது."

ஏற்புரையில் பாலகுமாரன் மறுபடி 'க்' பிரச்சினையைக் கொண்டு வந்து சம்பிரதாய மீறலுக்குப் போராடும் தமது தனித்தன்மையை வலியுறுத்தினார்.

'க்' தொடர்பான இந்த வாதங்களின் உண்மை எப்படியானாலும் ஒரு எழுத்தாளனுடைய 'செண்டிமெண்ட்'டை நாம் மதிக்கக் கடமைப்பட்டுள்ளோம். அது ஒரு வேளை ஒன்பது எழுத்து என்ற அதிர்ஷ்ட எண்ணுக்காக நடந்த எளிய காரியமாகவே இருப்பினும் அந்த எண்ணத்துக்கும் மரியாதை அளிப்பதில் தவறென்ன?

—பி. எஸ். எம்.

○ பாலகுமாரனுக்குக் கல்கி நிறுவனம் சார்பில் அவ்வை மலர் மாலை அணிவிக்க, கல்கி விநாயகர் சிலையை அன்பளிப்பாக வழங்கினார் கமல்.



# ஒவ்வொரு டிக்கெட்டிலும்

# 21 வெற்றி வாய்ப்புகள்

குலுக்கல் 21-1-85
டிக்கெட் ரூ. 500/-

**மொத்தப் பரிசு**

40 முதல் பரிசுகள்: ரூ. 10 லட்சம் வீதம்
(குலுக்கல் கடைசி 4 எண்களில்)

40 இரண்டாவது பரிசுகள்: ரூ. 1 லட்சம் வீதம்
(குலுக்கல் கடைசி 4 எண்களில்)

400 மூன்றாவது பரிசுகள்: 10 ஆயிரம் வீதம்
(குலுக்கல் கடைசி 3 எண்களில்)

4000 நாலாவது பரிசுகள்: 1000/- வீதம்
(குலுக்கல் கடைசி 2 எண்களில்)

40,000 ஐந்தாவது பரிசுகள்: 500/- வீதம்
(குலுக்கல் கடைசி ஒரு எண்ணில்)

**மினி குலுக்கல்**

20 முதல் பரிசுகள்
ரூ. 5 லட்சம் வீதம்
(குலுக்கலுக்கு ஒரு பரிசு வீதம்)
8000 இரண்டாவது பரிசுகள்
ரூ. 1000/- வீதம்
(குலுக்கலுக்கு 400 பரிசுகள் வீதம்)

MINI DRAWS:
1st on 18.12.84, 2nd on 19.12.84,
3rd on 20.12.84, 4th on 21.12.84,
5th on 25.12.84, 6th on 26.12.84,
7th on 27.12.84, 8th on 28.12.84,
9th on 1.1.85, 10th on 2.1.85,
11th on 3.1.85, 12th on 4.1.85,
13th on 8.1.85, 14th on 9.1.85,
15th on 10.1.85, 16th on 11.1.85,
17th on 15.1.85, 18th on 16.1.85,
19th on 17.1.85, 20th on 18.1.85

SUSAK ADS: 2003/84

விற்பனையாளர்கள், ஏஜெண்ட்டுகள், ஸ்டாக்கிஸ்டுகளுக்கு வியக்கத்தக்க அதிருஷ்ட பரிசு:
30 அம்பாஸிடர் கார்
டிக்கெட்டுகள் எல்லா பெரிய லாட்டரி விற்பனையாளர்களிடம் கிடைக்கும்.





Convenor Raffle Committee D.D Hosp. Hyderabad in aid of developing Dr. C.D. Deshmukhi Cardio Vascular Institute and Research Centre.



ஆர்கனைசிங் ஏஜெண்ட்:
சந்திரா ஏஜென்ஸிஸ்
17, [illegible],
புதுதில்லி-110 001 போன்: 311351, 31120[illegible]

சூப்பர் ஸ்டாக்கிஸ்ட்: மெஸர்ஸ் கே. ஏஜென்சிஸ்,
ரூம் நெ. 204 & 205, குப்தா லாட்ஜ், கே. ஜி. சர்க்கிள், பெங்களூர்-560 009

அஞ்சலி

# எழுத்திலே அழுத்தம்! கருத்திலே தெளிவு! நடையிலே சரளம்!

அண்மையில் மறைந்த சோஷலிஸ்ட் தலைவர் அசோக் மேத்தாவுடன், அவர் கட்சியில் இணைந்து பணியாற்றியதோடு அசோக்மேத்தாவின் பேச்சுகளைத் தமிழகச் சுற்றுப் பயணங்களின்போது மொழிபெயர்க்கும் வாய்ப்பும் அடிக்கடி பெற்ற டாக்டர் விஜயலட்சுமி சொல்கிறார்:

அவருக்கு மிகவும் இளகினமனம். ஒரு முறை தென்னார்க்காடு மாவட்டத்தில், சுற்று பயணம்செய்தபோது விழுப்புரம் ரயில் நிலையத்தில், ரயிலுக்குக் காத்திருந்தோம். உயர்வகுப்புவெயிட்டிங் ரூமில் போய்த் தங்கச் சொன்னபோது அசோக் மேத்தா, ''எதற்காக? இங்கே பிளாட்பாரத்திலேயே, மற்றத் தொண்டர்களுடன் இருக்கிறேன்!'' என்று சொல்லிப் பெஞ்சில் உட்கார்ந்து விட்டார். பக்கத்தில் ஒரு கைக் குழந்தையுடன் அழுது கொண்டிருந்த பெண்மணியைப் பார்த்ததும், மனம் பதறி என்னிடம், ''போய் அந்தப் பெண் ஏன் அழுகிறாள் என்று தெரிந்து கொண்டு நாம் ஏதாவது உதவ முடியுமா என்று பார்'' என்றார். கணவன் கொடுமை தாங்காமல் அண்ணன் வீட்டுக்குப் போகிறாள் அவள் என்று அறிந்ததும், 'நாட்டில் பெண்கள் நிலை எப்படி இருக்கிறது என்று பார்த்தாயா? என்று வருத்தப்பட்டு, அந்தப் பெண்ணுக்கும், குழந்தைக்கும் டீ, ரொட்டி எல்லாம் வாங்கித் தந்து ஆறுதல் சொன்னார்.

இன்னொரு தடவை, தெற்கே சுற்றுப் பயணம். தளதளவெனப் பசுமையான வயல்கள். கார் அதைக் கடக்கும்போது, திடீரென நிறுத்தச் சொன்னார். காரை விட்டு இறங்கிச் சில நிமிடங்கள் பச்சை வயல்களில் மனத்தைப் பறிகொடுத்து விட்டு அங்கிருந்த வேலைக்காரனை அழைத்துத் தட்டிக் கொடுத்து விட்டு, ''நீயும், உன் போன்ற உழைப்பாளிகளும் கஷ்டப்பட்டு உழைத்ததன் விளைவுதான் இந்தப் பச்சை விளைச்சல். நீ நன்றாய் இரு. உன் சகாக்கள் நலமாய் இருக்கட்டும். உன் முதலாளிக்கு என் பாராட்டுக்கள்'' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டார்.

● ● ●

மேத்தாவிடம் சிறந்த பண்பு — அதை அவர் பலவீனம் என்று கூடச் சொல்லலாம். அதுதான் அவரது இரக்க சுபாவம். ஒரு தடவை கேரளாவில் சுற்றுப் பயணத்தின் போது ஓர் ஏழை இடுப்பில் சின்னத் துணியுடன் வந்து நிற்பது கண்டு என்ன என்று விசாரிக்க ''பசி, சாப்பிட்டு ரெண்டு நாளாகிறது'' என்றுஅவன் சொல்ல இவர், ''நாட்டில் எல்லாரும் ஒரு வேளையாவது வயிறாரச் சாப்பிடவேண்டும்'' என்ற படியே, தம் பையிலிருந்து ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்துக் தந்து, ''இந்தா! இரண்டு நாளாவது நன்றாய்ச் சாப்பிடு'' என்று சொல்ல அவன் அப்படியே மேத்தா கால்களில் விழுந்து விட்டான்.



○ டாக்டர் விஜயலட்சுமி

● ● ●

அசோக் மேத்தா 'ஜனநாயக சோஷலிஸம்' என்று ஒரு புத்தகம் எழுதினார். அப்போது ஜெயப் பிரகாஷ் நாராயண் சென்னையில் தங்கி சிகிச்சை பெற்று வந்தார். மேத்தா தாம் எழுதியவற்றை சென்னைக்கு அனுப்ப நான் ஒவ்வொரு அத்தியாயமாக ஜே.பி.க்குப் படித்துக்காட்டுவேன். இடையிடையே ஜே. பி. ''நிறுத்து இதை நோட் பண்ணிக் கொள்'' என்பார். கடைசியில், நோட் பண்ணினவற்றையெல்லாம், படித்துக் காட்டச் சொல்லி, அந்தப் புத்தகத்துக்கு ஓர் அருமையான முன்னுரை எழுதித் தந்தார். அசோக் மேத்தாவின் எழுத்துப் பற்றி ஜே. பி. சொன்னது: ''பார்! எழுத்திலே அழுத்தம்! கருத்திலே தெளிவு! நடையிலே சரளம்!''

தொகுப்பு: **மௌஷ்மி**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani                Editor: K. Rajendran

# பூஸ்ட் துள்ளித்திரியும் பள்ளிப் பருவத்திற்கு நாள்தோறும் ஈடுகொடுப்பது

உங்கள் மகன் அருந்தும் காலைக் கோப்பை பாலுடன் கலந்துக் கொடுங்கள் சக்தியளிக்கும் பூஸ்ட், நாள்தோறும், காலை தோறும்.

பிறகு பாருங்களேன்! நாள் முழுவதும் அவனே ஒரு அதிவேக ரயில் வண்டி தான்!

காலை ஸ்கூலில் ஆரம்பித்த நேரங்கள், தொடர்ந்து உருண்டு புரண்டு களித்திடும் கால் பந்தாட்டம். பிறகு முழு கவனத்துடன் முடிக்கப்படும் வீட்டுப்பாடங்கள் வரை ...

இதற்கென்றே பூஸ்டின் சக்தி.

உங்கள் மகன் துடிப்புடன், களிப்புடன் ஒவ்வொரு நாளையும் கழிக்க உதவுகிறது.

காலை முதல் இரவு வரை.

பூஸ்ட் புது ஆடைப்பால், பொன்னிற கோதுமை, மால்டெட் பார்லி மற்றும் சுவையான கோககோவை ஒருங்கே சேர்த்து, உங்கள் குழந்தைக்குதேவையான சக்தியளிக்கும் கார்போ-ஹைடிரேட்டுகளையும், திடமான உடற்கட்டிற்கு ப்ரோடீன்களையும் அளிக்கிறது.






துடிதுடிப்புடனும், ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் எரிபொருள்.

8342

